Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 351

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர். மஹாவித்வான்.

# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா 10 ரூ. ஜீவியச் சந்தா ரூ. 25

பேரருளாளன் [illegible]
திருவடி [illegible]



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர்
திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

பிங்களஹு ஆவணி மீ 10-9-1977

# புத்தக வரவேற்பு

**(ஸ்ரீமத் பகவத்கீதை—ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமி உபந்யாஸத் தொகுப்பு.)**

உபயவேதாந்த வித்யாநிதியாய் ஸ்ரீ பாஷ்ய பகவத்விஷய ரஹஸ்யாதி ப்ரவசன ப்ரவீணராய் ஏறக்குறைய முப்பதாண்டுகள் சென்னையில் எழுந்தருளியிருந்து பெரும் புகழ்பெற்ற ஸ்ரீமதுபயவே. காரப்பங்காடு வேங்கடாசார்யஸ்வாமி பகவத்கீதா மஹார்த்தோபந்யாஸத்தில் தனிச்சிறப்புவாய்ந்தவரென்பதை நாடு நகரமும் நன்கறியும். ஸ்ரீ ஸ்வாமி உபந்யாஸங்கள் செய்தருளும் ஸமயங்களில், பிற்பாடு அநுபவத்திற்காகச் சில சீடர்கள் ஒருவாறு ஏடுபடுத்திக்கொள்ளும்படியை நாம் நேரில் கண்டிருக்கிறோம். அந்தவகையில் ஸ்ரீ உ. வே. மயிலை. C. R. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி தொகுத்தெழுதிவைத்த வுரை லோகோபகாரார்த்தமாக வெளிவரத்தொடங்கி யிருக்கின்றது. இதில் தற்போது முதல்ஷட்கம் [முதல் ஆறு அத்யாயங்கள்] 154 பக்கங்கள்கொண்ட முதல் ஸம்புடமாக வெளிவந்துள்ளது உரைநடையைப்பற்றி நாம் விசேஷித்துத் தெரிவிக்கவேணுமோ? எளிய தெளிய நடை இதனினும் வேறு காண்பதரிது. மூல சுலோகங்கள் தேவநாகரி லிபியிலும், தமிழ் லிபியிலுமுள்ளது. பதவுரையும் விசேஷ வுரையும் மிக அற்புதமாக வெளிவந்துள்ளது. இத்தகைய பதிப்பு இதுகாறும் வெளிவந்திலது என்னலாம். இரண்டு மூன்று ஷட்கங்களும் க்ரமேண விரைவில் வெளிவருமென்றறிகிறோம். ஸ்ரீமதுபயவே.செந்தமிழ்வேதியர் குமாரவாடி S. ராமாநுஜாசாரியர் பரிசோதித்துப் பதிப்பித்த இப்புத்தகத்தின் அமைதியைப்பற்றி நாம் எழுதவேண்டியதுமுண்டோ? மிக விரும்பத்தக்க முறையில் பதிப்பேறியுள்ளது. இப்புத்தகம் விலைக்குக் கிடைக்குமிடங்கள்—(1) ஸ்ரீமான் C. R. ஸ்ரீநிவாஸய்யங்கார், 42, மேல உத்தர வீதி, ஸ்ரீரங்கம், திருச்சி-6. (2) ஸ்ரீ உ. வே. குமாரவாடி ஸ்வாமி, 29 8, ஆபிரகாம் முதலி தெரு, மயிலாப்பூர், மதராஸ்-4. ஆஸ்திகபக்தர்களனைவரிடமும் இருக்கத்தக்க புத்தகமிது.

இப்படிக்கு, பத்ராதிபர் P. B. A.

---

# ஸ்ரீ காஞ்சியில் ராமாநுஜ கருணாலய மகாநாடு

நிகழ்ச்சித் தொகுப்பு: K. A. மணவாளன். சென்னை-5.

சின்ன காஞ்சீபுரம் ஸ்ரீ வரதராஜஸ்வாமி ஆலயக் கிழக்குகோபுரவாசலில் ஸந்நிதி வீதியிலுள்ள ஸ்ரீ உடையவர்திருமாளிகையின் புதிய மாமணி மண்டபத்தில் ஸ்ரீராமாநுஜகருணாலயத்தின் ஆதரவில் ஸ்ரீராமாநுஜரின் 961வது அவதார வைபவ மகாநாடு 14-8-77 ஞாயிறு பிற்பகலில் கூடியது. சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி G ராமாநுஜம் அவர்கள் மகாநாட்டுக்குத் தலைமைதாங்கினர். ஸ்ரீ. V. V. வெங்கடவரதனின் திவ்வியப் பிரபந்த இசைக்குப்பின் பேராசிரியர் K. A. மணவாளன் (அடியேன்) நூல்களாலும் உபந்நியாசங்களாலும் பல்லாண்டுகளாகப் பெருந்தொண்டாற்றிவரும் மஹாமஹோபாத்யாய காஞ்சீ P. B. அண்ணங்கராச்சாரியார் ஸ்வாமியைப் பூர்வாசார்யர்களோடு ஒப்பிட்டுப் பேசி வரவேற்றபின் மற்றும் நீதிபதி அவர்களையும் சொற்பொழிவாற்ற வந்திருந்த வித்வான்களையும் பொதுமக்களையும் வரவேற்று ஒத்துழைப்பு நல்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டபடி.

ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீ ஆதிகேசவப்பெருமாள் ஸ்ரீபாஷ்யகாரஸ்வாமி தேவஸ்தான தர்மகர்த்தாவும் மடாதிபதியுமான ஸ்ரீமத்பரமஹம்ஸ ஸ்ரீயதீந்திரப்ரவணயதிராஜ ஜீயர்

இதன் தொடர்ச்சி ராப்பர் 3வது பக்கம் காண்க

# ஸ்ரீ ராமாநுஜன் 351



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்

| தொகுதி 30 | பிங்கள௵ ஆவணி௴<br>**10—9—1977** | பகுதி—3 |
|---|---|---|


## ஸ்ரீ எம்பார் ஜீயர் ஸ்வாமியின் திருநாடலங்கரிப்பு

ஸ்ரீபெரும்பூதூரில் ஏறக்குறைய 125 வருஷங்களுக்குள்ளாக அவ்விடத்து மணவாளமாமுனிகள் ஸன்னிதி ஸமீபத்தில் **எம்பார் ஜீயர் மடம்** என்பதாக ஒரு மடம் ஸ்தாபிதமாயிற்று. எம்பார் ஸன்னிதியாகிய மதுரமங்கலத்தில் திருவவதரித்து எம்பார் ஜீயர் ஸ்வாமியென்றே ப்ரஸித்தி பெற்றவரான மஹா ஸ்வாமி—ஸ்ரீபெரும்பூதூரில் பலவாண்டுகள் எழுந்தருளியிருந்து பலபல கைங்கரியங்களைச் செய்ததுமல்லாமல், அங்கிருந்த ஸ்ரீவைஷ்ணவ ஸ்வாமிகளுக்கெல்லாம் உபய வேதாந்த ரஹஸ்ய க்ரந்த ப்ரவசனம் செய்தருளி அவர்களை விலக்ஷணாதிகாரிகளாக்கியும், எம்பெருமானார் ஸன்னிதியில் பலவகைப்பட்ட பரிஷ்காரங்களைச் செய்தருளியும் பெரும்புகழ் பெற்றார். அந்த ஸ்வாமி ஸம்ப்ரதாயார்த்த விஷயமாகவும் ஸாமாந்ய சாஸ்த்ரவிஷயமாகவும் ஸம்ஸ்க்ருதபாஷையிலும் மணிப்ரவாள பாஷையிலும் சிலபல க்ரந்தங்கள் அருளிச் செய்திருக்கிறார். நான்கு சாஸ்த்ரங்களிலும் துல்யமான ப்ரஜ்ஞையுள்ளவர் என்று ப்ரஸித்திபெற்றவர். ஸ்ரீவசனபூஷண வியாக்கியானத்திற்கு இந்த ஸ்வாமிதாம் இயற்றியுள்ள அரும்பதவிளக்கம் (சில பகுதிகள்) அச்சிடப்பட்டுள்ளது. அதனால் இந்த ஸ்வாமியின் பாண்டித்ய ப்ரகர்ஷம் அறியவெளிது. ஸ்ரீகாஞ்சீபுரியில் ஸுப்ரஸித்த வித்வத் ஸார்வபௌமராக எழுந்தருளியிருந்த திருப்புட்குழி ஸ்வாமியென்று ப்ரஸித்தரான ஸ்ரீக்ருஷ்ணதாதார்ய மஹாதேசிகன் இந்த ஸ்வாமி ஸன்னிதியிலே (பூர்வாச்ரமத்தில்) பூர்வமீமாம்ஸை அதிகரித்ததாக எழுதியுள்ளார்கள். இவர்க்கு **கப்பியாரூர் ஜீயர் ஸ்வாமி** என்றும் ப்ரஸித்தி யிருந்ததாகத் தெரிகிறது.

அந்த ஜீயர் ஸ்வாமிக்கு ஸ்ரீபெரும்பூதூரில் ப்ராவண்யாதிசயம் விளைந்த பிறகு அவ்விடத்தில் தமது திருநாமத்தினால் ஒரு மடம் ஸ்திரமாக ஸ்தாபிக்கப்படவேணு

மென்று திருவுள்ளமுண்டாகி, அப்படியே ஸ்தாபிதமாயிற்று. அந்த மஹாஸ்வாமி ஒருவரைமட்டுமே அடியேன் ஸேவிக்கப்பெற்றதில்லை. அவர்க்குப்பிறகு மடாதிபதிகளாக எழுந்தருளினவர்கள் எண்மர். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்தியாதி. தோட்டம் ஜீயர் இரண்டாமவராக நெடுநாள் எழுந்தருளியிருந்து ஒருமண்டப நிர்மாணமும் செய்வித்தருளினர். மூன்றாமவர் — அயோத்யாராமாநுஜ ஜீயர் ஸ்வாமி என்பவர். இந்த ஸ்வாமி சிலவாண்டுகள் ஸ்ரீரங்கநாராயண ஜீயர் பட்டத்திலெழுந்தருளி யிருந்து விலகி இங்கெழுந்தருளி யிருந்தார். நான்காமவர் சிறு குன்றம் ஜீயர் ஸ்வாமி. ஐந்தாமவர் திருவாலி. கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி. ஆறாமவர் குமாரவாடி ஸ்வாமி. ஏழாமவர் குணக்கரம்பாக்கம் அனந்தாண்பிள்ளை ஸ்வாமி. எட்டாமவர் இப்போது பரமபதித்தருளின ஸ்வாமி. இவர் திருக்கண்ணபுரம் ஸமீபத்தில் 'செலிப்பேரி' என்னும் அக்ரஹாரத்தில் அவதரித்தவர். திருமலை திருப்பதி பெரிய ஜீயர் மடாதிபதியாக [ஸ்ரீஸாது ஸ்வாமிக்கு முன்னே] எழுந்தருளியிருந்தவருடைய பூர்வாச்ரம திருக்குமாரர். கும்பகோணத்தில் சிலபல வருடங்கள் அட்வகேட்டாக இருந்தவர். திருக்கண்ணபுரம் தேவஸ்தானத்தில் தர்மகர்த்தாவாக எழுந்தருளியிருந்தவர் பரம ஸாத்விக கோஷ்டியில் ப்ரதமபரிகணநீயராக எழுந்தருளியிருந்தவர். சில மாதங்களாகத் திருமேனி பாங்கில்லாமல் எழுந்தருளியிருந்து திருநாடலங்கரித்தார்.

— சரமச்லோகம் —

அப்தே பிங்கள நாம்நி தாம்நி மஹஸாம் ஸிம்ஹம் கதே ச்யாமலே
பக்ஷே ப்ராதமிகே திதௌ ஶதபிஷக்தாரே விதோர் வாஸரே ।
ஸ்ரீராமாநுஜயோகி புங்கவபதாம்போஜத்வயீகிங்கர:
பேஜே ஸ்ரீசடகோபலக்ஷ்மணமுநி: விஷ்ணோ: பதம் சாச்வதம்.

## ஆனந்தவிகடனுக்கு அருமையான உபதேசம்

10—7—77ல் வெளிவந்த ஆனந்தவிகடன் 84ல் **காசியாத்திரை** என்ற மகுடத்தின்கீழ் அநீதியான கட்டுக்கதைகள் பலஇடம் பெற்றிருக்கின்றன. ஆரம்பத்திலேயே உள்ள பொய்ம்மொழிகளாவன—''ஸ்ரீராமபிரானால் பிரதிஷ்டை செய்யப்பட்டு பூஜிக்கப்பட்ட சிவலிங்கத்தை மூலத்தானமாகக்கொண்டு விளங்குவதால் ராமேச்வரம் திருக்கோயில் ராமாயண காலத்தோடு இணைந்த சிறப்புடையதாகும் அதனாலேயே இச்சிவலிங்கத்திற்கு ராமலிங்கம் ராமநாதர் ராமேச்வரர் என்ற திருநாமங்கள் வழங்கப்படுகின்றன''—என்றிவையாம். இவற்றை நாம் வஜ்ரகுடாரமிட்டுப் பலகால் தகர்த்திருக்கிறோம். நீர்நிலைகளில் பாசிபடருகிறபோதெல்லாம் தள்ளித்தானேயாகவேண்டும். பாசி மறுபடியும் படராதபடிக்குத் தள்ளித் தொலைக்கிறோம் சிவபெருமானுக்கும் இராமபிரானுக்கும் எவ்விதமான தொடர்பு என்பதை முன்னம் உலகமுணரத் தெரிவிக்கிறோம். ''ராமாயண காலத்தோடு'' என்கிறார் இக்கட்டுரைகாரர். வடமொழியிலமைந்த வான்மீகிராமாயணம் இவர்க்குக் கனவிலும் தெரியாது. கம்பராமாயணம் கேள்விப்பட்டிருப்பர். அதில் ஒரு பாடல் போதும் இவர்களது மருளை மாய்க்க. அதில் பாலகாண்டத்தில் திருவவதாரப் படலத்தில் (பா—13)*எழுந்தனர் கறைமிடற்றிறைபும், தாமரைச், செழுந்தவிசு, உவநத அத்தேவும் சென்றெதிர், விழுந்தனர்

அடிமிசை விண்ணுளோரொடும், தொழுந்தொறும் தொழுந்தொறும் களிதுளங்குவார்* என்பதாம் *கறைமிடற்றிறை யென்றால் அவர் யார்தெரியுமா? பொய்கையாழ்வார் *நெறிவாசல்தானேயாய் நின்றானை, ஐந்து பொறிவாசல் போர்க்கதவஞ்சாற்றி—அறிவானும் ஆலமரநீழல் அறம் நால்வர்க்கு அன்றுரைத்த, அலமமர் கண்டத்தரன்* என்று போற்றின பரமசிவனார். அவர்க்குக் (கறைமிடற்றிறை என்கிற திருநாமம் எதனால் கிடைத்தது? எப்போதுகிடைத்தது? தெரியுமோ? *அண்ணல் செய்து அலைகடல் கடைந்து அதனுள் கண்ணுதல் நஞ்சுண்ணக் கண்டவனே! விண்ணவரமுதுண அமுதில்வரும் பெண்ணமுதுண்ட எம்பெருமானே!* என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்தினால் அது தெரியவரும். திருமால் கடல்கடைகிறபோது அங்கு இந்த முக்கண்ணன் எதற்காகச் சென்றான்? என்பதை ஆராய்வாரில்லையே. அதைப் பற்றிப் பிறகு ஆராய்வோம். இராவணன் முதலான அரக்கர்களை வதம் செய்ய வேணுமென்று வேண்டித் திருப்பாற்கடலில் திருமால் திருவடிவாரத்திற்கு பிரமனிந்திரன் முதலான தெய்வங்களைத் திரட்டிக்கொண்டு ஓடிச்சென்றவர் பரமசிவனார் என்பதைத் தெரிந்து கொண்டிருக்கிறீர்களா? திருமாலைக் கண்டவுடனே பரமசிவனார் பட்டபாடு தெரியுமோ? *ஆடினர்பாடினர் அங்குமிங்குமாய், ஓடினர் உவகை மாநறவுண்டோர்கிலார், வீடினர் அரக்கரென்று உவக்கும். விம்மலால், சூடினன் முறைமுறை துளவந்தாள்மலர்* என்றார் கம்பர்பிரான். திருமழிசைப்பிரான் தமது திருவந்தாதியில் உமைக்கும் சிவனுக்கும் நடந்ததொரு ஸம்வாதத்தையருளிச் செய்யத்தொடங்கி* *கண்டு வணங்கினார்க்கு என்னாங்கொல்!* என்றார் நேரில் எம்பிரானை ஸேவித்து விட்டால் என்னாகுமோ? என்றார். இன்னது ஆயிற்றென்பதைக் கம்பர் விவரித்துரைத்தார்.

## சிவபெருமானுக்கு ஸ்ரீமஹாவிஷ்ணுவிடத்திலுள்ள பக்தி

ஸ்ரீ மஹாவிஷ்ணுவிடத்திலே சிவபெருமான் எப்படிப்பட்ட ப்ரதிபத்தியையுடையவர் என்பதை முன்னம் தெளிந்து கொள்ளவேண்டும் இதற்குப் பலவழிகளுண்டு. எல்லாருமறிந்த ஒரு வழியை முன்னம் நினைவூட்டுவோம். ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ரநாமத்தில் 'பார்வத்யுவாச' என்று பார்வதியின் கேள்வியாக ஒரு ச்லோகமும் 'ஈச்வர உவாச' என்று பரமசிவனுடைய பதில்வார்த்தையாக வொருச்லோகமும், உலகமெல்லாம் சொல்லிவருவது அபலபிக்க முடியாதது. பார்வதியின் கேள்வியென்னவென்றால், "கேநோபாயேந லகுநா விஷ்ணோர் நாமஸஹஸ்ரகம், பட்யதே பண்டிதைர் • நித்யம் ச்ரோதுமிச்சாம்யஹம் ப்ரபோ! — சிறியதோருபாயத்தாலே விஷ்ணுவின் ஆயிரந் திருநாமங்களையும் சொன்னதாக ஆவதற்கு வழியுண்டோ?" என்று கேட்டாள் பார்வதி. அதற்குப் பரமசிவன் "ஸ்ரீராமராம ராமேதி ரமே ராமே ஸஹஸ்ரநாமதத்துல்யம் ராமநாம வராநநே!" என்று பதில் சொன்னதாகவுள்ளது. ராமநாமத்தைச் சொன்னால் ஸஹஸ்ரநாமஞ் சொன்னதாக ஆய்விடுமென்றும், நானும் அந்த ராமநாம ஸங்கீர்த்தனத்தில்தான் ரமித்திருக்கிறேனென்றும் சிவபெருமானுடைய பதில் வார்த்தை. பார்வதீ! என்பேரைச்சொன்னால் ஸஹஸ்ரநாமம் சொன்னதாக ஆய்விடும் என்று சிவபெருமான் சொல்லவில்லை. அப்படிச்சொன்னால் ஏற்கனவே நேர்ந்தவொரு பாதகத்திற்குமேல் மநோரமே, பரதேவதாத்ரோஹ மஹாபாதகமும் தனக்கு நேருமென்று அஞ்சியே அவர் அப்படிச் சொல்லவில்லை.

உலகில் அவரவர்கள் தம் தம் மனைவிகளிடத்தில் தங்கள் பெருமைகளைப் பேசிக் கொள்வதுண்டு; அப்படி இவரும் பேசுவரோ வென்று பரீக்ஷிப்பதற்காகவே பார்வதி தன் பர்த்தாவை நோக்கி இக்கேள்வி கேட்டது. அந்தப் பரீக்ஷையில் பரமசிவன் ஏமாந்துபோகாமல்—தனக்கில்லாத பெருமையைத் தான் பேசிக்கொள்ள முன்வரமாட்டாமல் உண்மையான விடையை விடுத்தார்.

அந்த ஸ்ரீராமன் யாவனென்று தெரிந்துகொள்ளவேண்டியது அவ்சியமல்லவா? இவ்வுண்மையைத் தெரிவிப்பதில் ஸ்ரீராமாயணமே ஸமர்த்தமானது அதில் பல பல ச்லோகங்களிருந்தாலும் இங்கு நாம் சிற்சில ச்லோகங்களையே உதாஹரிக்க விரும்புகிறோம். அதில் அயோத்யா காண்டத்தின் உபக்ரமத்தில் ‘ ஸஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதன:” என்று, ஸ்ரீ மஹாவிஷ்ணுவே ஸ்ரீராமனுயவதரித்ததாகஸ்பஷ்டமாய்ச் சொல்லப்பட்டது- ஆரம் த்தில் “ஏதஸ்மிந்நந்தரே விஷ்ணுருபயாதோ மஹாத்யுதி:” என்றதும், ராவண வதத்திற்குப் பிறகு தேவதைகளெல்லாரும் திரண்டு வந்து ‘ பவாந் நாராயணோதேவா:” என்றதும் காண்க. அந்த தேவதா ஸமூஹத்தில் முக்கண்ணப்பனும் சேர்ந்திருந்ததை வான்மீகி முனிவர் “ஷடர்த்த நயன:ஸ்ரீமாந்” என்று கண்ணையிட்டுக் காட்டிவைத்தார் இதுதவிர முக்கியமாக நோக்கத்தக்கதொன்றுண்டு லங்காபுரியில் ராவணாதிகளுக்கு முன்பு குடிவாழ்ந்த மாலி சுமாலி மால்யவான்களை வதைக்க வழி தேடின தேவர்கள் முதலில் சிவபெருமானைச் சரணமடைந்து வேண்டிக் கொண்டதாகவும் அப் பெருமான் ‘இது என்னாலாவதன்று; சங்க சக்ர கதாபாணியான ஸ்ரீமந் நாராயணனே இவர்களை வதைக்க வல்லவன்’ ஏன்று சொன்னதாகவும், பிறகு அவர்கள் ஸ்ரீமந் நாராயணனை அடைந்து வேண்டி அபயம் பெற்றதாகவும் உத்தர ஸ்ரீ ராமாயணத்தில் ஆருவது ஸர்க்கத்தில் கூறப்பட்டிருக்கின்றது. இப்படியுள்ள பல இதிஹாஸங்களினால் சிவபெருமான் விஷ்ணு பகவானைப் பரதேவதையாகக் கொண்டிருந்தபடியால்தான் அந்த விஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீ ராமனிடத்திலேயே தான் ரமிப்பதாகவும் தன் தேவிக்கும் அதை உபதேசிப்பதாகவும் அமைந்திருக்கின்றது

**(மற்றொரு கட்டுக்கதையும் கேண்மின்)**

ஸ்ரீ மஹாவிஷ்ணு தினப்படியாகப் பரமசிவனை ஆயிரம் தாமரை மலர்களினால் அர்ச்சித்து வந்தாரென்றும், ஒருநாள் இரு தாமரைப்பூ குறைந்துபோகத் தன் திருக்கண்களைப் பிடுங்கி அவைகொண்டு அர்ச்சித்தாரென்றும் அதனாலேயே அப்பெருமானுக்குப் புண்டரீகாக்ஷனென்று பெயருண்டாயிற்றென்றும் நேத்ரார்ப்பணேச்வரரென்கிற பெயருமுண்டென்றும் சில துராக்ஹிகள் சொல்லுவது அபஹாஸ்யமான கட்டுக் கதை இக்கதை உண்மையில் பௌராணிகமாக இருந்தால் புண்டரீகாக்ஷநாம பாஷ்யத்தில் சங்கர பகவத்பாதாள் எழுதியிருப்பார்கள். பல பொருள்கள் எழுதுவதில் இதையும் ஒரு பொருளாக எழுதியுருப்பர். அஸந்கதையை மஹா ப்ராமாணிகர்களான அவர்கள் எழுத ப்ரஸக்தியுண்டோ? “புண்டரீகாகாரே உபே அக்ஷிணீ அஸ்ய” என்று செந்தாமரை போன்ற இரண்டு கண்களையுடையவரென்கிற பொருளைச் செய்தாரேயல்லது, தன் கண்களைத் தாமரையாக உபயோகப்படுத்தினவர் என்கிற அநுவாதத்திற்கும் அநர்ஹமான) பொருளைச் செய்திலர். பத்மீ பத்மநிபேக்ஷண: *பத்மநாபோ அரவிந்தாக்ஷ:* என்னு மிடங்களிலும் ஶங்கரபாஷ்யம் காண்க.

சங்கர பகவத்பாதாள் தம்முடைய பாஷ்யத்தில் கதைகளைக் காட்டுகிற வழக்கமில்லாமையால் காட்டவில்லையெனில், இது சங்கரபாஷ்யத்தை அடியோடு பாராதவர்களின் பேச்சாகும். அதில் அபரிமிதமான கதைகள் எடுத்தாளப்பட்டிருப்பது காணலாம். அந்தக்கதைகளெல்லாம் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பாரம்யத்தை ப்ரதிஷ்டாபநம் செய்யுமவையே யல்லது, விஷ்ணுவுக்கு அபகர்ஷத்தையோ தேவதாந்தரங்களுக்கு உத்கர்ஷத்தையோ எள்ளளவும் காட்டுவனவல்ல. கேசவநாமத்தின் பாஷ்யத்தில் ஹரிவம்சத்திலிருந்து கதை காட்டியுள்ளார். ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்குக் கேசவனென்று பெயர் கொடுத்தவன் பரமசிவனேயாவன். அந்தப் பெயரைக்கொடுக்கும்போது "கோ ப்ரஹ்மேதி ஸமாக்க்யாத: ஈசோஹம்ஸர்வதேஹிநாம் ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவ நாமவாந்" என்று சொல்லிக்கொண்டே கொடுத்ததாக ஹரிவம்சத்திலுள்ளதை யெடுத்துக்காட்டுகிறார்கள் பகவத்பாதாள். நிர்வாஹகர் நிர்வாஹ்யரை அர்ச்சித்து வந்தாரென்கை ஏற்கத்தக்கதன்று. எல்லாரினும் மேம்பட்டவர் ஒரு சிற்றரசனை வணங்கினரென்று பித்துக்கொள்ளிதான் பேசுவன்.

அர்க்க: என்னும் திருநாமத்திற்கு பாஷ்யம் செய்கிற பகவத்பாதாள் 'ப்ரஹ்மாதிபி: பூஜ்யதமைரபி அர்ச்சநீயத்வாத் அர்க்க:' என்றார்கள். இங்கு ஆதி சப்தத்தால் முந்துற முன்னம் சிவபெருமானைத் தானே கொள்ளவேண்டும்! தன்னை அர்ச்சிக்கத் தோன்றியவர்களைத் தான் அர்ச்சித்தானென்கை அஸங்கதம். *அமிதாசன:* என்கிற திருநாமத்திற்கு பாஷ்யமியற்றுகையில் "ஸம்ஹாரஸமயே விச்வம் அச்நாதீதி அமிதாசந:" என்றார் பகவத்பாதர். விச்வசப்தார்த்தத்தில் ப்ரஹ்ம சிவாதிகளும் சேர்ந்தவர்களேயன்றோ.

விஷ்ணுவுக்கு வ்ருஷபாக்ஷ: என்றொரு திருநாமமுள்ளது; நேத்ரார்ப்பண கதை உண்மையாயிருந்தால் இந்தத்திருநாமத்தின் பாஷ்யத்திலே ஒருவாறு இக்கதையைப் புகுத்தியிருக்கலாம். வ்ருஷப பதத்திற்கு வ்ருஷபவாஹநனென்று பொருள் கூறி அவருக்கு அக்ஷியைக் கொடுத்தவர் என்று எளிதாக எழுதியிருக்கலாமே. இங்கு சங்கரபாஷ்யம்—எப்படியுள்ளதென்று எடுத்துப்பாருங்கள்.

## — பகவத்கீதையும் சங்கரபாஷ்யமும் —

வேதம் இதிஹாஸ புராணங்கள் முதலிய ஸகல ப்ரமாணங்களிற் காட்டிலும் பகவத்கீதை மிகச் சிறந்ததென்று சொல்லும்படியாக உலகமெங்கும் கொண்டாடப் பட்டு வருகின்றது. இது பகவான் தானே யருளிச்செய்ததென்னும் ஏற்றமுடையது அந்த பகவான் ஸ்ரீமந் நாராயணனென்றும் ஸ்ரீமஹாவிஷ்ணுவென்றும் குலாவப்படுகிற பரமபுருஷனேயென்பது நிர்விவாதம். இப்படிப்பட்ட கீதாசாஸ்த்ரத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பரத்வமும் இதர தேவதைகளின் அவரத்வமும் அடுத்தடுத்துத் தெரிவிக்கப்படுகிறது. (10—8) *அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே* என்னுமிவ்விடத்தில் சங்கரபகவத் பாதாளுடைய பாஷ்யம்:—

*"அஹம் பரம் ப்ரஹ்ம வாஸுதேவாக்க்யம்; ஸர்வஸ்ய ஜகத: ப்ரபவ:— உத்பத்தி: மத்தஏவ ஸ்திதிநாச க்ரியாபலோபபோக லக்ஷணம் விக்ரியாரூபம் ஸர்வம் ஜகத் ப்ரவர்த்ததே" இத்யாதி. மூலத்தில் நாராயணபதமும் விஷ்ணுபதமும் வாஸுதேவபதமும் ஸ்பஷ்டமாக இல்லாதவிடங்களில் சங்கரபகவத்பாதாள்

விஷ்ணுநாராயண வாஸுதேவ பதங்களையிட்டே பாஷ்யம்செய்து போருகிறார். (9-22) *அநந்யாச் சிந்தயந்தோமாம்* என்றவிடத்தில் *பரம் தேவம் நாராயணம் யே பர்யுபாஸதே, தேஷாம் பரமார்த்ததர்சிநாம்* என்று, பரதேவதையான நாராயணனை உபாஸிப்பவர்களே பரமார்த்தம் கண்டவர்களென்கிறார், 'விஷ்ணுவுக்குப் போலவே சிவனுக்கும் பாரம்யமுண்டு' என்கிற வாதத்தை ஆதிசங்கரபகவத்பாதாள் ஸஹிப்பதில்லை. கீதையில் ஸ்ரீமந் நாராயணன் தவிர மற்றுள்ள தேவதைகளை பஜனஞ்செய்யுமவர்களைப் பற்றிச் சொல்லாமலில்லை (7-20 *காமைஸ்தைஸ்தைர்ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தே அந்யதேவதா:* என்று தொடங்கிச் சொல்லுகையில் (ச்லோ. 23 *அந்தவத் து பலம் தேஷாம் தத் பவதயல்பமேதஸாம்* என்று முடிக்கப்பட்டது. இந்த ச்லோகத்தின் சங்கரபாஷ்யத்தின் முடிவான வாக்யம் பரமபக்தர்களை அவசமாகவே கண்ணீர்விடச் செய்கின்றது. "ஏவம் ஸமாநேऽபி ஆயாஸே மாமேவ ந ப்ரபத்யந்தே அநந்தபலாய; அஹோ கலு கஷ்டதரம் வர்த்ததே-இதி அநுக்ரோசம் தர்சயதி பகவாந்" என்பது இங்கு சங்கரபாஷ்யபங்க்தி நாராயணோபாஸகர்களுக்குத்தான் அனந்தமாய் அக்ஷயமான பலன் கிடைக்குமென்று தெரிந்திருக்கவும் அந்தோ! சிலர் அற்ப பலனுக்காக இதர தேவதைகளைப் பற்றுகிறார்களேயென்று வாஸுதேவன் வருந்திக் கூறுவதாகக் கண்டறிந்து சங்கரபகவத்பாதாள் எழுதியிருப்பது குறிக்கொள்ளத் தக்கது. அவர் தாம் அழுதுகொண்டேயன்றோ எழுதுகிறார்!

பதினோராமத்யாயத்தில் விச்வரூபப்ரதர்சநம் அமைந்திருப்பது இதர தேவதைகளின் அவரத்வத்தைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டுவதற்காகவே; அதில் அர்ஜுநன் மூன்றாவது ச்லோகத்தில் 'நீயே பரமேச்வரனென்பது வாஸ்தவமே; ஆனாலும் அதை நான் ஸாக்ஷாத்கரிக்க விரும்புவதால் உன்னுடைய வைஷ்ணவ ரூபத்தைக் காட்டலாமோ?" என்று விரும்ப, *பச்யாதித்யாந் வஸூந் ருத்ராந் அச்விநௌ மருதஸ் ததா* என்று தன் திருமேனியினேகதேசத்திலே யொடுங்கிக்கிடக்கிற ஸகலதேவதைகளையும் காணென்று காட்டிக்கொடுத்தான் ஸ்ரீமந்நாராயணன்; திவ்ய சக்ஷுஸ்ஸைப் பெற்று அதுகண்ட அர்ஜுனன் "பச்யாமி தேவாந் தவ தேவ! தேஹே" என்று தொடங்கி விதி சிவ பாவகாதி ஸகல தேவதைகளையும் வாஸுதேவனுடைய தேஹத்திலே தான் காண்பதாகக் கூறினன். இதை இந்திரஜாலமென்று கூறிற்றிலனாகையாலே அத்வைத வாதம் அடியற்றது. தேவதாந்தர பாரம்யவாதம் ஸுதராம் தொலைந்தது. வேறொரு தேவதை இப்படி விச்வரூபங்காட்டித் தன்னிடத்திலே நாராயணன் ஒடுங்கியிருப்பதாகக் காட்டவல்லதோ? *ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா:...வீக்ஷந்தே த்வாம் விஸ்மித்ராச்சைவ ஸர்வே* என்ற ச்லோகமானது *பின்னிட்ட சடையானும் பிரமனுமிந்திரனுமென்று ஆழ்வார்கள் அருளிச்செய்வதற்கு மூலமாக விளங்குகின்றது. ... ... ... ... ... *

## — ராமேச்வரம் என்கிற சொல்லைப்பற்றின சாஸ்த்ர விசாரம் —

ராமேச்வரம் என்கிற வொரு சொல்லுக்கு தத்புருஷஸமாஸம், பஹுவ்ரீஹி ஸமாஸம், கர்மதாரய ஸமாஸம், த்வந்த்வஸமாஸம் என்று நான்கு வகைப்பட்ட ஸமாஸங்கள் கொள்ள சாஸ்த்ரம் இடம் தருகின்றது: (1) ராமஸ்ய ஈச்வர:-ராமேச்வர: இது தத்புருஷ ஸமாஸம் ராமனுக்குத் தலைவன் என்றபடி. (2) ராம: ஈச்வர:

யஸ்ய ஸ :— இது பஹுவ்ரீஹி ஸமாஸம். ராமனைத் தலைவராகக் கொண்டவர் என்றபடி 3) ராமச்சாஸௌ ஈச்வரச்ச; இது கர்மதாரய ஸமாஸம்: ராமனாகிய தலைவன் என்றபடி. (4) இனி த்வந்த்வ ஸமாஸமாவது, *ராமச்ச ஈச்வரச்ச தயோஸ் ஸமாஹார:- ராமேச்வரம்*என்பது, த்வந்த்வஸமாஸம் கொண்டால் 'ராமலக்ஷ்மணௌ' என்பதுபோல 'ராமேச்வரௌ' என்று த்வி வசநாந்தமாக ஆகவேண்டாவோ வென்று சங்கிக்க வேண்டா; *ஸர்வோ த்வந்த்வோ விபாஷயா ஏகவத் பவதி* என்பது வையாகரண பரிபாஷையாதலால் ஏகவசநாந்தமாகவும் நிற்பது பொருந்தும். ஆகவே இங்கு த்வந்த்வஸமாஸமும் இணங்கும்; ராமனும் ஈச்வரனுமென்று இந்த ஸமாஸத்தின்படி பொருளாகும்: இதன்மேல் ஒரு ஆராய்ச்சி அவசியமாகிறது.

ராமேச்வரம் என்பது ஊருக்குப் பெயரா? தெய்வத்திற்குப் பெயரா? என்று விமர்சிக்கவேண்டும்; இரண்டு விதமாகவும் வைத்துக்கொண்டு சொல்லுகிறோம். ஊருக்குப் பெயரானால் ஸ்ரீராமனைத் தலைவனாகக் கொண்டவூர் என்கிறவொரு பொருள் தான் பொருந்தும். சிவபிரான் சொன்னதாகப் பெரியவாள் தெரிவிக்கிற பஹுவ்ரீஹிஸமாஸந்தான் பொருத்தமானதென்று தேறும். தத்புருஷஸமாஸங்கொண்டால் ராமனுடைய ஐச்வர்யம் விளங்குமூர் என்பதுதான் ஒருவாறு தேறும். கர்மதாரயஸமாஸம் பொருந்துவதற்கு வழியே கிடையாது. இனி ராமேச்வரமென்பதை, தெய்வத்திற்குப் பெயராக வைத்துப் பார்ப்போம். ஸ்ரீராமனுக்கு ஈச்வரனாக ஒரு தெய்வத்தைச் சொல்லவேணுமானால் அந்த தெய்வம் ஸ்ரீரங்கநாத மூர்த்தியேயல்லது மற்றொன்று எடுத்துக் கழிக்கவும் தகுதியில்லை ஸ்ரீராமன் *ஆத்மாநம் மாநுஷம் மந்யே என்ற தனது மநுஷ்ய பாவனைக்குச் சேர ஸ்ரீரங்கநாத திவ்யமூர்த்தியைத் தனது குல பரம்பரை ஆராதித்து வந்த காரணத்தினால் தானும் ஆராதித்து வந்ததாகப் புராணப்ரஸித்தி புள்ளது; ஸ்ரீராமாயணத்திலும் பட்டாபிஷேக ஸந்தர்ப்பத்திலுள்ள *லப்த்வா குலதநம் ராஜா* என்ற சுலோகத்தின் வியாக்யானத்தில் இதை முன்னோர்கள் விளக்கியுமுள்ளார்கள். மற்றும் பூர்வாசாரியர்களும் இதை வெளியிட்டுள்ளார்கள் ஆகவே ஸ்ரீராமனுக்கு ஈச்வரன் என்று தத்புருஷஸமாஸம் கொள்வதானால் ஸ்ரீரங்கநாதன் தவிர மற்றொரு தெய்வம் தலைகாட்ட ப்ரஸக்தியில்லை ஸர்வநியந்தாவாய் ஸர்வேச்வரனென்று ஸகல வேதங்களாலும் போற்றப்பட்ட ஸ்ரீமந் நாராயணன் தன்னுடைய நியாம்யர்களிலே சிலரைத் தனக்கு ஈச்வரனாகக் கொண்டானென்று நெஞ்சாலெண்ணுவதும் அபசாரமாகும். அவதார விசேஷங்களிலே *ஸுக்ரீவம் நாதமிச்சதி* ஸுக்ரீவம் சரணம் கத:* இத்யாதிகளைக்கொண்டு யதேச்ச பாஷணம் செய்யவொண்ணாது.

பரமசிவனார் பஹுவ்ரீஹிஸமாஸம் சொன்னாரென்பது உண்மையில் மிகவும் பொருத்தமானது. அவர் ஸ்ரீராமனைத் தலைவராகக் கொண்டிருந்தவரென்பது யாராலும் அபலபிக்க முடியாதபடி பஹுப்ரமாணஸித்தமாயிருப்பதனால் ஸர்வஜ்ஞரென்று பேர்பெற்ற அவர் சொன்னதுதான் பொருத்தமாயிருக்கத் தக்கது. சிவபெருமான் திருவேங்கடமலையில் நாராயணமூர்த்தியைத் தொழுவதற்கு வந்ததைத் தெரிவிக்கின்ற நம்மாழ்வார் திருவாய்மொழியில் (3-10-8) *நுண்ணுணர்வின் நீலார்கண்டத் தம்மான்* என்று ஸூக்ஷ்மஜ்ஞான நிதியான நீலகண்டபகவான் என்று கொண்டாடியன்றோ கூறுகிறார். ஸர்வஜ்ஞரென்று அவருக்கு இயற்பெயராயுமுள்ளது. அப்படிப்பட்ட அவர் உள்ளபடி பொருத்தமாகச் சொன்ன பஹுவ்ரீஹிஸமாஸத்தில் ஒரு

விதமான அநுபபத்தியும் சொல்ல முடியாதாகையாலே அதுதான் ஸித்தாந்தப் பொருளாகும்.

இனி கர்மதாரய ஸமாஸத்திற் செல்வோம். கீழ் இரண்டு மூர்த்திகள் தெரிவித்த தாகச் சொல்லப்பட்ட இருவகை ஸமாஸங்களிலும் ஈச்வரனென்ற சொல்லுக்கு என்ன பொருள் கொள்ளப்பட்ட தென்பதை விவேகிகள் சற்று ஆராயவேணும். அவ்விரண்டு ஸமாஸங்களிலும் ஈச்வர சப்தத்திற்குச் சிவனென்கிற பொருள் கொள்ளப்படவில்லை யென்பது வெளிப்படை. ஸ்ரீராமனுக்குத் தலைவன் என்றும், ஸ்ரீராமனைத் தலைவனாக வுடையவன் என்றுமன்றோ பொருள் விவரிக்கப்பட்டது ஆகவே ஈச்வர: என்ற சொல்லுக்குப் பொதுவாக ப்ரபுவென்கிற பொருளே கொள்ளப்பட்டிருக்கின்ற தென்பது வ்யக்தம். இப்போது கர்மதாரய ஸமாஸத்திலும் அப்பொருளையேதான் கொள்வதற்கு ஔசித்யமுள்ளது. "ராமச்சாஸௌ ஈச்வரச்ச ராமேச்வர:" என்பது கர்மதாரயஸமாஸ மென்று விளக்கப்பட்டிருக்கின்றது. இந்த ஸமாஸந்தான் த்ருப்திகரமாக முடிந்த தென்றும் பெரியவாள் தெரிவிப்பதால் உண்மையில் இந்த ஸமாஸத்தினால் ஏற்படுகிற பொருள்தான் ஸகல ப்ரமாணங்களுக்கும் ஸகல ப்ராமாணிகர்களுக்கும் திருப்திகர மாகும். விக்ரமாதித்யராஜ: என்றால் விக்ரமாதித்யனாகிற அரசன் என்று பொருள்பட்டு விக்ரமாதித்யனே அரசன் என்று தானே தேறும். அதுபோலவே இங்கும் ஸ்ரீராமனே தலைவன் என்னும் பொருள் தவிர வேறொரு பொருள் தோன்றுவதற்கு இடமே கிடையாது. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில் (விச்வயோநி:) புநர்வஸு:) என்கிற திருநாமத் திற்கு பாஷ்யம் செய்த சங்கர பகவத்பாதாள், "*விச்வம் யோநி: யஸ்ய = விச்வச் சாஸௌ யோநிச்ச இதிவா விச்வயோநி:"* என்று பஹுவ்ரீஹியும் கர்மதாரயமுமாகிற இரு ஸமாஸமும் காட்டியுள்ளார். அர்த்தத்தில் சிறிதும் வைபரீத்யமில்லை. இங்கும் அப்படியே வைபரீத்யமில்லாத பொருளே தேறி நிற்கும். ஸ்ரீராமனே தலைவன் என்பது தான் அப்பொருள். வடமொழிப் புலவர்களுக்கே நிலமான இந்த விசாரம் போதும்.

## — அருமருந்தான ஐயங்கார் பாசுரம்

தொள்ளாயிரம் வருடங்களுக்கு முன் பிள்ளைப்பெருமாளையங்கார்.

"மங்கைபாகன் சடையில் வைத்த கங்கை யார்பதத்துநீர்
வனசமேவு முனிவனுக்கு மைந்தனானதில்லையோ?
செங்கையாலிரந்தவன் கபாலமாரகற்றினார்?
செய்யதாளின் மலரரன் சிரத்திலானதில்லையோ?
வெங்கண் வேழம் மூலமென்ன வந்ததுங்கள் தேவனோ
வீறுவாணனமரிலன்று விறலழிந்த தில்லையோ?
அங்கண் ஞாலமுண்டபோது வெள்ளி வெற்பகன்றதோ?
ஆதலாலரங்கனன்றி வேறு தெய்வமில்லையே."

என்று சில கேள்விகள் கேட்டிருக்கின்றார்; பிறரால் ஆர்ஜவத்துடன் ஸமாதானம் சொல்ல வொண்ணாதபடி இங்ஙனே கேட்கத்தக்க கேள்விகள் கணக்கிலடங்கா.

## — அத்வைதிகளுக்கும் சைவர்களுக்குமுள்ள வாசி —

உபநிஷத்துக்களுக்கோ ஸூத்ரங்களுக்கோ அர்த்தம் பண்ணுகையில் அத்வைதக் கொள்கை ஏற்பட்டது. இக்கொள்கையுடையார்க்கு நாராயணனிடத்தில்

த்வேஷமோ தேவதாந்தரத்தினிடத்தில் பக்தியோ விளைவதற்கு ஔசித்யமேயில்லை சைவ மதக் கொள்கை வேறு. அத்வைத மதக் கொள்கை வேறு; அத்வைதிகளுக்கு சைவர்களென்கிற வ்யபதேசம் கிடையாது. சைவர்கள் நாராயண தூஷணம் செய்தால் அதில் வியப்பில்லை. அத்வைதிகள் நாராயணனிடத்து த்வேஷம்பாராட்டுவது அநுசிதம். நாராயணனைவிட்டு வேறு தெய்வத்தை உபாஸிப்பதும்; நாராயணனையும் இதர தெய்வங்களையும் துல்யமாக நினைப்பதும் மஹாபாதகமென்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றன; வராஹபுராணத்தின் உள்ளீடான கைசிக புராணத்தில் இவ்விஷயம் நம்பாடுவானென்கிற பரம பக்தனுல் பல பாபங்களையும் சொல்லிவருமடைவிலே மேலே நாம் கூறின இரண்டு பாபங்களும் தெரிவிக்கப்பட்டுள்ளன; *வாஸுதேவ பரித்யஜ்ய யே அந்யம் தேவம் உபாஸதே. தேஷாம் பாபேந லிப்யேய யத்யஹம் நாகமே புந:* இத்யாதி. வராஹ புராணத்தில் சைவர்களுக்கு விப்ரதிபத்தியிருந்தாலும் அத்வைதிகளுக்கு இருக்க நியாயமில்லை. இவ்விஷயம் வராஹபுராணமொன்றில் மட்டுமன்றே; வைதிக மதஸ்தர்களுக்கு உபஜீவ்யங்களான ப்ரமாணங்களெல்லாவற்றிலும் இது மிகமிகப் பரந்துள்ளது.

—இங்கே மிகவும் ரஸமானவொரு விஷயத்தை நிரூபணம் செய்கிறோம்— சங்கரபகவத்பாதாள் நாராயணனையே பரதேவதையாகக்கொண்டு நாராயணோபாஸநத்தையே மோக்ஷஸாதநமாகக் கொண்டவர். இது அவருடைய ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யத்தில் நன்கு விளங்குகின்றது. 2—2—42) *உத்பத்த்யஸம்பவாத்* என்கிற ஸூத்ரபாஷ்யத்தில் *"தத்ர பாகவதா மந்யந்தே"* என்று தொடங்கி பாஞ்சராத்ர ப்ரமேயமாக மூன்று விஷயங்களைத் தெரிவித்து இரண்டு விஷயங்களில் தம்முடைய ஸம்மதியைக்காட்டி ஒரு விஷயத்தில்மட்டும் தமது அஸம்மதியைக்காட்டி முடிக்கிறார்; ஸம்மதங்களாகத் தெரிவிக்கப் பட்டுள்ள இரண்டு விஷயங்கள் எவையென்னில்; அவருடைய பங்க்திகளையே காட்டுவோம் *தத்ர யத்தாவதுச்யதே யோஸௌ நாராயண: ப்ரஸித்த: பரமாத்மா ஸர்வாத்மா இதி. தத் ந நிராக்ரியதே. யதபி தஸ்ய பகவத: அபிகமநாதிலக்ஷணம் ஆராதநம் அஜஸ்ரம் அநந்ய சித்ததயா அபிப்ரேயதே. தத்பி ந நிராக்ரியதே — ச்ருதிஸ்ம்ருத்யோ: ஈச்வரப்ரணிதாநஸ்ய ப்ரஸித்தத்வாத்" என்பவை சங்கரபகவத்பாதாளுடைய பங்க்திகள். நாராயணனே பரதேவதையென்பதை இங்கு ஸித்தாந்தப் படுத்தியுள்ளார். ஈச்வராதி ஸாமாந்ய சப்தங்களை வாஸுதேவ விஷ்ணுநாராயணாதி விசேஷ சப்தங்களையேயிட்டுப் பரதத்வ நிஷ்கர்ஷம் செய்தவாள் ஆதிசங்கர பகவத் பாதாள். அவர்களுடைய பரம்பரையில் நாராயண. நாராயண என்கிற ஸந்ததோச்சாரணமும் நாராயணஸ்ம்ருதி* என்கிற ஹஸ்த முத்ரையும் இன்றளவும் விபர்யயமடையாமலுள்ளது.

## வேதங்கண்ட உண்மைத் தெய்வம்

வேதங்களின் பலபாகங்கள் ஒருவராலும் ஓதப்படாமல் சிதைந்தும் மறைந்தும் கிடக்கின்றன. அப்படியல்லாமல், ஸ்மார்த்தர் மாத்வர் ஸ்ரீவைஷ்ணவர் சைவர் என்கிற வாசியில்லாமல் ப்ராஹ்மண ஸமுதாயம் முழுவதும் ஓதிவருவதும், சிவபெருமானுடைய ஆலயங்களிலும் நிரந்தரமாகப்பாராயணம்செய்யப்பட்டு வருவதுமான யஜுர் வேதத்திலிருந்து இரண்டு அருமையான விஷயங்கள் காட்டுகிறோம். (1) தைத்திரீய ஸம்ஹிதையில் ஐந்தாவது காண்டத்தில் ஐந்தாவது ப்ரச்நத்தில் *அக்நிரவமோ தேவதாநாம் விஷ்ணு: பரம: * என்பதொரு வாக்கியம். [தேவதைகளுக்குள்ளே விஷ்ணுவானவர்

ஸர்வோத்தமர்; அக்நி ஸர்வாதமர்] இதன்பொருள்; என்பது இதுவன்று பொருள்என்று இதைமறுத்து வேறுபொருள்சொல்லவல்லாருளரேல் முன்வரலாம். இதற்குமேல் [அக்நி ரவம:] என்னப்பட்ட அக்நிதேவதை எது வென்னில் *ருத்ரோ வா ஏஷ யத் அக்நி:* என்று அவ்விடத்திலுள்ளதையே கொண்டு நிர்ணயிக்கப்பாங்குண்டு வைதிகர்களுக்கு; பெரும் பாலும் கண்டபாடத்திலும் ஆலயபாராயணங்களிலும் வாராத உபநிஷத் பாகங்களைக்கொண்டு விசாரங்கள் செய்வது ஒருபுறமிருக்கட்டும். ப்ராஹ்மணர்களின் கண்டபாடத்திலும் ஆலய பாராயணங்களிலுமுள்ள ஸம்ஹிதாபாகத்தை ஈண்டுநாம் எடுத்துக்காட்டியிருக்கிறோம். (2) அக்நிசப்தம் ருத்ரபரந்தானா? என்கிற விசாரத்தில் புகவேண்டாதபடி ருத்ரபதத்தையே ஸாக்ஷாத்தாகக்கொண்டு வேதம் தெரிவித்துள்ள மற்றொரு விஷயமுங்கேளீர். தைத்திரீயஸம்ஹிதையில் முதல் காண்டத்தில் எட்டா வது ப்ரச்நத்தில்—*ஆகுஸ் தே ருத்ர! பசுஸ் தம் ஜுஷஸ்வ; ஏஷ தே ருத்ர! பாகஸ் ஸஹ ஸ்வஸ்ரா அம்பிகயா தம் ஜுஷஸ்வ* என்கிற வாக்கியங்களை வேதமோதுகிற அந்தணர்கள்யாவரும் ஓதிவருகிறோம். பட்டபாஸ்கரபாஷ்யத்திலும் வித்யாரண்ய பாஷ்யத்திலும் ஒருமிடருக எழுதப்பட்டுள்ள பொருள் கேளீர். [ஹே ருத்ர! ஏஷ: ஆகு: தே பசு: தம் ஜுஷஸ்வ] ருத்ர பகவானே! உனக்கு மூஷிகம் [எலி] விருப்ப மான பக்ஷணம்; நிவேதனம் செய்யப்படுகிற இதனை ஸ்வீகரித்துக்கொள்.

இப்படி பாஷ்யம் செய்த பட்டபாஸ்கரர் ருத்ரபகவானுக்கு எலியாகிய அற்ப ஜந்துவையா நிவேதநம் செய்வது! என்று தாமே சங்கித்துக்கொண்டு [ச்ருதிப்ராமாண் யாத் அவகம்யதே] என்று கை கூப்புகிறார். ப்ரபல ப்ரமாணமான வேதம் இல்லா ததைச் சொல்ல மாட்டாதே என்பது பரமதாத்பர்யம். இந்த எலி பக்ஷணத்தை ருத்ர பகவான் ஏகாகியாக ஸ்வீகரித்துவிடாமல் அம்பிகையோடுங்கூட ஸ்வீகரிக்கவேணு மென்று அடுத்தபடியாகக் கோரப்பட்டிருப்பது பெரியதொரு விசேஷம். அதாவது— [ஸஹ ஸ்வஸ்ரா அம்பிகயா தம் ஜுஷஸ்வ] ஸ்வஸாவான அம்பிகையோடுகூட இந்த எலி பக்ஷணத்தை அருந்த வேண்டியதென்றபடி. தேவியான அம்பிகையை ஸ்வஸா [தங்கை] என்று சொன்னதெப்படி ? என்று சங்கித்துக்கொண்டு. தங்கை போல் அன்புடையவள்—என்று ஒருவர் பொருள் கூறினர்; மற்றொருவர். லக்ஷித லக்ஷணை யென்றெழுதி ஸெளபாக்கியவதியான அம்பிகையோடு என்றார். ஸ்வஸா-பகிநீ; பகிநீ- ஸெளபாக்யவதீ—பகவதீ = இதுதான் லக்ஷிதலக்ஷணையென்பது.

[ஹேருத்ர! ஆகு: தே பசு:] என்றவிடத்தில் பசுவாகச் சொல்லப்பட்டது எது? என்பதை அந்த தைத்திரீய ஸம்ஹிதையே விவரித்துக் காட்டியுள்ளது. அதில் ஆறுவது காண்டத்தில் இரண்டாவது ப்ரச்நத்தில் த்ரிபுரஸம்ஹாரகதையைச் சொல்லுகிற *தேஷாமஸுராணாம்* என்கிற அநுவாகத்தில் [க: இமாமஸிஷ்யதீதி; ருத்ர இத்யப்ரு வந், ருத்ரோ வை க்ரூர: ஸ: அஸ்யது] ருத்ரனே கொடியவனாகையாலே அவன் அம்பையெடுத்து எய்யட்டும் என்றார்களாம். உடனே அவர் வரம்வேண்டத் தொடங் கினார்—[ஸோப்ரவீத் வரம் வ்ருணை; அஹ மேவ பசூநாம் அதிபதிரஸாநீதி தஸ்மாத் ருத்ர: பசூநாம் அதிபதி:]— அதிலேயே மூன்றுவது காண்டம் முதல் ப்ரச்நத்தில் நாபாநேதிஷ்டனுடைய உபாக்கியானத்தில் பசுசப்தார்த்த விவரணம் அறியதக்கது. நாபாநேதிஷ்டன் ரிஷிகளுக்கு மந்த்ரவிசேஷத்தைநினைவூட்டி அதற்குப் பரிசாக யஜ்ஞ சிஷ்டங்களையெல்லாமெடுத்துக் கொண்டு புறப்பட்டவாறே ருத்தரன் வந்து [அஹமேவ பசூநாமதிபதி:—யத் யஜ்ஞவாஸ்தௌ ஹீயதே மம வை த] என்று தடுத்துப்போராடி அப்போது அந்தருத்ரன் ஒரு வரம் வேண்டினதாகவுள்ள வரலாறுகள் வைதிகர்களின் வாக்கில் விரியவுணர்வது. ... ... ... ...

# இனி, தென்னாட்டுத் திருப்பதி யாத்திரை

சென்னையிலிருந்து ஆரம்பித்து அடைவே தெரிவிப்போம்.

## முதலில் தொண்டை நாடு

1. **திருவல்லிக்கேணி.** ஸ்ரீ பார்த்தஸாரதிப் பெருமாள் ஸன்னிதியும் தெள்ளிய சிங்கப்பெருமாள் [நரஸிம்ஹஸ்வாமி] ஸன்னிதியும் ஸேவிக்கத் தக்கவை. பேயாழ்வார் திருமழிசையாழ்வார் திருமங்கையாழ்வார் ஆகிய மூன்று ஆழ்வார்களால் மங்களா சாஸனம் செய்யப்பெற்ற தலம் இது. வானமாமலை மடம், அஹோபில மடம் முதலிய மடங்களும் தர்ம சாலைகளும் உள்ளன. மதராஸ் மாநகரத்தில் ஒரு பகுதியாகவுள்ள ஊர்—திருவல்லிக்கேணி யென்பது. ஸென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து தெற்கே இரண்டு மைல் தூரத்திலும், எழும்பூர் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே இரண்டு மைல் தூரத்திலுமுள்ளது. *மன்னு தண்பொழிலும் வாவியும் மதிளும் மாடமாளிகையும் மண்டபமும்* என்று திருமங்கையாழ்வார் அருளிச்செய்தபடி மிக அழகு பொலிந்த தலமிது.

*சென்னைமாநகர் (Madras) இஃது எங்கும் பிரசித்திபெற்ற மாநகரம். இதில் டவுன் நடுவில் சென்னை கேசவப்பெருமாள் ஸன்னிதி, திருவேங்கடமுடையான் ஸன்னிதி, ஸ்ரீரங்கநாதன் ஸன்னிதி, உடையவர் ஸன்னிதி முதலான ஸன்னிதிகள் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஆதரவளிப்பன.

இந்நகரின் ஒரு பகுதியாகிய மயிலாப்பூரில் கேசவப்பெருமாள் ஸன்னிதி, மாதவப்பெருமாள் ஸன்னிதி என்கிற ஸ்தலங்கள் பக்தர்களுக்கு அவசியம் ஸேவிக்கத் தக்கவை. பேயாழ்வாருடைய திருவவதாரம் ஷை மயிலையில் என்று உணர்க.

## 2. திருநின்றவூர் 3. திருவெவ்வுளூர் 4. திருக்கடிகை

இத்தலங்கள், முறையே தின்னனூர், திருவுள்ளூர், சோளிங்கபுரம் என வழங்கப்பெறும். திருநின்றவூரில்—பத்தராவிப் பெருமாள் (பக்தவத்ஸலன்), என்னைப் பெற்ற தாயார் இவர்கள் மிக அற்புதமான ஸேவை தருவார்கள். திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமிகளின் ஆளுகைக்கு உட்பட்ட தேவஸ்தானம் இது. திருமங்கையாழ்வார் இத்தலத்திற்கு எழுந்தருளினபோது பத்தராவி யெம்பெருமான் பிராட்டி பக்கலிலே ஊன்றியிருந்து ஆழ்வார்க்கு ஸேவைதந்தருளாமற் போக, ஆழ்வாரும் எம்பெருமானை ஸேவிக்கவும் பாடவும் பெறுமல் மனக்குறைபுடனேபுறப்பட்டு அப்பால் எழுந்தருள, பிறகு இதனை யுணர்ந்த பத்தராவிப் பெருமாள் 'அந்தோ! ஆழ்வாருடைய மங்களாசாஸனப் பாசுரத்தைப் பெறும் பாக்கியம் இல்லையாயிற்றே! என்று திருவுள்ளம் நொந்து, பிராட்டியாலும் தூண்டப்பட்டு ஆழ்வாரைத் தேடிப் பின் தொடர்ந்து செல்ல, அப்போது ஆழ்வார் திருவல்லிக்கேணி கடந்து திருநீர்மலை கடந்து திருக்கடன் மல்லை யெம்பெருமானைக் கண்ணுரக்கண்டு களித்துப் பாடிக்கொண்டிருக்க, அவரெதிரே சென்று நின்று 'திருநின்றவூர்ப் பெருமானுகிய என்னையும் பாடவேணும்' என்று வேண்ட, "நின்றவூர் நித்திலத்தை......கண்டது நான் கடன்மல்லைத் தலசயனத்தே"; என்று இவ்வளவே பாடினாராழ்வார். அது பெற்று மீண்டுவந்த பத்தராவிப்

பெருமாள் பின்னையும் பிராட்டியால் தூண்டப்பட்டு இன்னமும் பாசுரம் பெறவிரும்பி ஆழ்வாரைத் தேடித் தொடர்ந்து செல்ல, அப்போது ஆழ்வார் சோழநாட்டில் திருக் கண்ணமங்கையில் எம்பெருமானைக் கண்ணாரக்கண்டு களித்துப் பாடிக்கொண்டிருக்க, எதிரேசென்று நின்று 'ஆழ்வீர்! திருநின்றவூர்ப் பெருமானாகிய என்னை மீண்டும் பாடவேணும்' என்று வேண்ட, "குருமாமணிக் குன்றினை நின்றவூர்நின்ற நித்திலத் தொத்தினை...கண்ண மங்கையுள் கண்டுகொண்டேனே' என்று பாடினார் ஆழ்வார். அது பெற்றுக் களித்து மீண்டான் திருநின்றவூர்ப் பெருமான்—என்பது பெரியார் கூறும் ஐதிஹ்யம்.

3. **திருவெவ்வுளூரில்**–ஸ்ரீ வீரராகவப் பெருமாள் கனகவல்லித் தாயார் இவர்களின் ஸேவை அற்புதமானது. வீக்ஷாரண்யமென்று புராண ப்ரசஸ்தமான க்ஷேத்திரமிது. இங்கே சயனத் திருக்கோலம். திருமழிசையாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் பாடின தலமிது. ஸ்ரீ அஹோபிலம் ஜீயர்ஸ்வாமியின் ஆதீனமானது. இவ்விடத்தில் கல்கத்தா ஸேட் ஒருவர் சில வருஷங்களுக்கு முன்பு விசேஷத்திருப்பணிகள் செய்திருப்பது குறிப்பிடத்தக்கது.

கீழ்ச் சொன்ன தின்னனூர் ஸ்டேஷனுக்கு ஸமீபத்திலுள்ள **திருவள்ளூர்** ஸ்டேஷனிலிருந்து 2 மைல் தூரத்திலுள்ளது ஸன்னிதி. ஸன்னிதியின் வாசலில் **ஹ்ருத்தாப நாசினீ** யென்ற மிகப்பெரிய புஷ்கரிணி சிறந்த புண்ணியதீர்த்தமாயுளது. காண்ப தற்கழகானவூர். ஸகல வசதிகளுமுண்டு.

4. **திருக்கடிகையில்** எம்பெருமானுடைய திருநாமம் **தக்கான்** என்பது. இங்கு ஒரு நாழிகை வாஸம் பண்ணினாலும் முக்தி கிடைக்குமென்பதுபற்றி இத் தலத்திற்குக் **கடிகாசலம்** என்று புராணத் திருநாமம். (**கடிகா**—நாழிகை). பேயாழ்வாரும் திருமங்கை யாழ்வாரும் **கடிகை** யென்றே மங்களாசாஸனம் செய்துள்ளார்கள். 'தக்கானைக் கடி கைத் தடங்குன்றின்மிசையிருந்த அக்காரக்கனியை யடைந்துய்ந்துபோனேனே' என்ற திருமங்கையாழ்வாருடைய பாசுரத்தின்படி, **தக்கான் அக்காரக்கனி** என்ற இரண்டு திரு நாமங்களாலும் எம்பெருமானுக்கு ப்ரஸித்தியுண்டு. இவ்விடத்தில் சிறியமலை, பெரிய மலை என இரண்டு திருமலைகள் உண்டு. இவ்விடத்து வரப்ரஸாதம் மிக்கபெரும் புகழ் பெற்றது. சிறிய திருவடியின் பிரபாவம் இங்கு அதிசயித்துளது. **தக்கான் குளம்** என்கிற தாமரைத்தடாகம் லோகோத்தரமானது. இங்கு சோளசிங்கன் என்கிற அரசன் விசேஷத் திருப்பணிகள் செய்ததனால் சோளசிங்கபுரம் என்று பிரஸித்தி பெற்றதென்பர். "அரக்கோணம் — பெங்களூர்" இருப்புப் பாதையில் ஷோலிங்கர் என்கிற ஸ்டேஷனிலிருந்து 9 மைல் தூரத்திலுள்ளது. அரக்கோணத்திலிருந்தே பஸ் வழியாகச் செல்வதெளிது.

இத்தலத்தில் ஆசார்ய புருஷர்களின் திருமாளிகைகள் விசேஷமாகவுள்ளன. சத தூஷணீ வ்யாக்கியான சண்டமாருத கர்த்தாவான ஸ்ரீ தொட்டயாசார்ய ஸ்வாமி யெழுந்தருளியிருந்த திவ்ய தேசம் இதுவே. எறும்பியப்பா கோயில் கொண்டிருப்பது மிங்கு. எறும்பியென்கிற அக்ரஹாரம் இத்தலத்திற்குச் சமீபத்திலுள்ளது.

இனி தென்னிந்திய இருப்புப்பாதையில் உள்ள திவ்ய தேசங்களின் விவரணம் காட்டுவோம். [இருப்புப்பாதையின் பெயர்கள் இப்போது மாறிவிட்டன.] *

## திருநீர்மலை

இத்தலத்தில் ஸ்ரீரங்கநாதன் முதலிய பல எம்பெருமான்கள் ஸேவை ஸாதித்தாலும், 'நீர்வண்ணன்' என்கிற எம்பெருமானே தலைமை பெற்றவர். இத்தலத்தை மங்களாசாஸனம் செய்தருளிய திருமங்கையாழ்வார் "இரும்பொழில் சூழ் நன்றாய புனல் நறையூர் திருவாலி குடந்தை தடந்திகழ் கோவல்நகர், நின்றானிருந்தான் கிடந்தான் நடந்தாற்கிடம் மாமலையாவது நீர்மலையே" என்றருளிச் செய்திருப்பதைப் பற்றிக் கொண்டு, நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தான் என்கிற எம்பெருமான்களெல்லாரும் இங்கே ஸேவை ஸாதிக்க வேணுமென்று ஆவல்கொண்ட பக்தர்கள் பிற்காலத்தில் சில எம்பெருமான்களை இங்கு எழுந்தருளப் பண்ணினதாகப் பெரியார் கூறுவர். ஆழ்வாருடைய மங்களாசாஸனத்திற்கு முன்னமே யெழுந்தருளியிருந்தவர்கள் எனினும் குறையில்லை. "எழும்பூர்—செங்கற்பட்டு" இருப்புப்பாதையில் பல்லாவரம் ஸ்டேஷனிலிருந்து மூன்றாவது மைலிலுள்ளது இத்தலம்.

## திருவிடவெந்தை

(திருவிடவெந்தை) இங்கு நித்யகல்யாணப் பெருமாள் கோமளவல்லித்தாயார் அழகிய காட்சி தருவர்கள். ஏகாந்தமான திவ்யதேசம். திருமங்கையாழ்வாரால் சிறந்த பதிகமொன்று பாடப்பெற்ற தலம். வண்டலூர் ஸ்டேஷனில் இருந்து பஸ் மார்க்கமாகச் செல்லலாம்; திருக்கடன்மல்லையிலிருந்து படகுமார்க்கமாகவும் செல்வது.

## திருக்கடன்மல்லை

இது மஹாபலிபுரமென்று ஸாமான்யர்களால் வழங்கப்பெறும். மாமல்லபுரமென்பர். தலசயனத்துறைவார் [ஸ்தலசாயிப்பெருமாள்] சயனத்திருக்கோலமாக ஸேவை ஸாதிக்கும் தலம். இங்கு அருமையான சிற்பவேலைகள் கண்ணைக் கவருமவை: இவற்றைக்காண மேல்நாட்டாரும் பலர் வந்து போவர். மகாமல்லன் என்கிற அரசன் இங்குத் திருப்பணிகள் செய்ததனால் மாமல்லபுரம் என வழங்கப்பட்டிருந்து நாளடைவில் மகாபலிபுரம் என்று சிதைந்து வழங்குவதாகக் கூறுவர். பூதத்தாழ்வாருடைய திருவவதார ஸ்தலம் இது. அவ்வாழ்வாராலும் திருமங்கையாழ்வாராலும் மங்களாசாஸனம் செய்யப்பெற்றது. இது கடற்கரையிலுள்ள தலமாதலால் அர்த்தோதயம் மஹோதயம் முதலான விசேஷ காலங்களில் திருவணையிற்போல் இங்கும் பெருந்திரள் கூடும். செங்கற்பட்டு ஸ்டேஷனிலிருந்து கழுக்குன்றம் வழியாய் இருபதாவது மைலில் அடையக்கூடிய தலம். பஸ் உண்டு.

## காஞ்சிபுரம்

தொண்டை நாட்டுத் திருப்பதிகள் மொத்தம் 22 என்று கீழே தெரிவித்தோம்; இதுவரைவிவரித்த 7 திருப்பதிகள்போக மற்ற 15திருப்பதிகள் காஞ்சீபுரத்திலுள்ளவை. அந்த 15-ல் ஒன்றான திருப்புட்குழி காஞ்சீபுரத்தில் சேர்ந்ததன்றாகிலும் காஞ்சீபுரத்திற்கு அருகிலுள்ளதே. காஞ்சியில் 18 திவ்ய தேசங்களுள்ளனவாக ஒரு ப்ரஸித்தியுண்டு. புராண க்ஷேத்திரங்கள் சிலவற்றையும் சேர்த்துக்கொண்டு 18 என்கிறார்கள். ஆழ்வார்களின் பாடல் பெற்ற திவ்ய தேசங்கள் பதினான்கே காஞ்சியிலுள்ளன.

(1) அத்திகிரி—இதுவே தேவப்பெருமாள் ஸன்னிதியென்றும் வரதராஜப்பெருமாள் ஸன்னிதியென்றும் வழங்குவது. 'கோயில் திருமலை பெருமாள் கோயில்' என்று சிறப்பித்துக்கூறும் திவ்யதேசங்கள் மூன்றனுள் இஃது ஒன்று. ஹஸ்திகிரியென்ற சொல்லுக்குத் தக்கபடி இங்கு மலையொன்றும். காணாவிடினும் இருபத்து நான்கு படிகளேறி ஸேவிக்கவேண்டிய உயர்ந்த நிலத்தில் பெருமாள் எழுந்தருளியுள்ளார். சிறிய குன்று வடிவமாகவே அந்த ஸ்தானமுள்ளது. கீழே அழகியசிங்கரும் மேலே தேவப்பெருமாளும் ஸேவை ஸாதிப்பர். *உலகேத்துமாழியான் அத்தியூரான்* என்றும் *அத்தியூரான் புள்ளையூர்வான்* என்றும் பூதத்தாழ்வாரும், *வரந்தருமாமணி வண்ணனிடம் மணிமாடங்கள் சூழ்ந்தழகாயகச்சி* என்று திருமங்கையாழ்வாரும் மங்களாசாஸனம் செய்துள்ளார்கள். நம்மாழ்வார் திருவிருத்தத்தின் தொடக்கத்தில் *இமையோர் தலைவா !* என்றும், திருவாய்மொழியின் தொடக்கத்தில் *அயர்வறுமமரர்கள் அதிபதி* என்றும் குறித்தது தேவப்பெருமாளையேயென்பது ஸம்ப்ரதாயம். நான்முகக்கடவுள் அச்வமேதயாகஞ் செய்து ஸாக்ஷாத்கரித்த தலம் இது.

(2) திருவெஃகா [ஸ்ரீயதோக்தகாரி ஸன்னிதி] தேவப்பெருமாள்ஸன்னிதிக்கு ஒரு மைல் தூரத்திலுள்ளது இந்த ஸன்னிதி. நான்முகன் செய்த யாகத்திற்குக் காரண விசேஷத்தினால் இடையூறு செய்ய வந்து வேகவதி நதியாகப் பெருகின ஸரஸ்வதியின் செருக்கடங்க எம்பெருமான் அணையாகப் பள்ளிகொண்ட தலம் இது. இந்த ஸன்னிதியின் பக்கத்திலுள்ள தாமரைத்தடாகத்தில் பொய்கையாழ்வார் *வனசமலர்க் கருவதனில் வந்துதித்தார். திருமழிசையாழ்வார் இத்தலத்தில் வெகுநாள் எழுந்தருளியிருந்து இப்பெருமானுடைய ஸௌலப்ய ஸௌசீல்யங்களை உலகமறியச்செய்த இதிஹாஸம் அறியத்தக்கது. அது காரணமாகவே இப்பெருமானுக்கு வடமொழியில் 'யதோக்தகாரீ' என்றும், தென்மொழியில் 'சொன்ன வண்ணஞ் செய்த பெருமாள்' என்றும் திருநாமம் ப்ரஸித்தமாயிற்று. பொய்கையாழ்வார் பேயாழ்வார் திருமழிசையாழ்வார் நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் ஆகிய ஐவர் மங்களாசாஸனம் செய்த தலமிது.

(3) அட்டபுயகரம். [அஷ்டபுஜத்தெம்பெருமான் ஸன்னிதி.] மேற்சொன்ன ஸ்ரீயதோக்தகாரி ஸன்னிதியின் அருகிலேயேயுள்ள தலமிது. *செம்பொனிலங்கு வலங்கை வாளி திண்சிலை தண்டொடு சங்கமொள்வாள், உம்பரிரு சுடராழியோடு கேடக மொண்மலர் பற்றி* என்கிற திருமங்கையாழ்வார் பாசுரப்படியே எட்டுத் திருவாயுதங்களைக்கொண்ட எட்டு புஜங்களையுடைய எம்பெருமானுடைய ஸேவை அற்புதமானது. *தொட்ட படை யெட்டுந் தோலாத வென்றியான் அட்டபுயகரத்தான்* என்று பேயாழ்வாரும், ஒரு பதிகத்தினால் திருமங்கையாழ்வாரும் மங்களாசாஸனம் செய்தருளின தலம்.

(4) வேளுக்கை. [ஆளழகிய சிங்கர் ஸன்னிதி.] மேற்சொன்ன ஸன்னிதிகளின் ஸமீபத்திலேயேயுள்ளது இது. இந்த திவ்ய தேசம் வெள்ளத்தில் முழுகிப் போனதாகச் சிலர் எழுதி வைத்திருப்பது நம்பத்தகுந்த தன்று. நன்றாக ஸேவை ஸாதிக்குமிடமேயிது. ஸ்ரீவேதாந்தவாசிரியர் பணித்த காமாஸிகாஷ்டகம் என்ற ஸ்தோத்ரம் இத்தலத்து விஷயமானதே. 'வேள் இருக்கை' என்பது வேளுக்கையென மருவியுள்ளது. ஆசையோடு எழுந்தருளியிருக்குமிடம் என்று பொருள். காமாஸிகா

என்றதன் பொருளுமிதுவே. *காமாத் அதிவஸந் ஜீயாத் கச்சித் அத்புத கேஸரீ* என்றதுமிப்பொருளை வற்புறுத்தும். பேயாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களா சாஸனம் செய்தருளின தலமிது. இங்கு இப்போது விசேஷத் திருப்பணிகள் நடை பெறுகின்றன.

(5) **திருத்தண்கா.** [தீபப்ரகாசன் ஸன்னிதி, விளக்கொளி யெம்பெருமான் ஸன்னிதி.] வேளுக்கையின் அருகிலேயே உள்ளது இது. இத்தலத்தெம்பெருமான் ப்ராசீனகாலத்தில் சயனத் திருக்கோலமாய் ஸேவை ஸாதித்ததாகச் சிலசான்றுகளால் தெரியவந்தாலும் இப்போது நின்ற திருக்கோலமே. திருமங்கையாழ்வார் மங்களா சாஸனம். திருவிருத்தத்தில் *நானிலம் வாய்க்கொண்டு* என்ற பாசுரத்தில் "விண்ணோர் தொழுங்கண்ணன் வெஃகாவுது அம்பூந்தேனிளஞ் சோலையப்பாலது" என்றுள்ளதைக்கொண்டு நம்மாழ்வாருடைய மங்களாசாஸனமும் இத்தலத்திற்குண் டென்பர் ஒரு சாரார் (**தண்கா** என்பதும் தேனிளஞ் சோலையென்பதும் பர்யாயம்.) இந்த ஸன்னிதியுள்ள விடத்திற்குத் தூப்பில் அக்ரஹாரம் என்கிற பெயர் மிகநவீனம். ஸ்ரீமத்வேதாந்தமஹாகுருவினுடைய திருவவதார ஸ்தலமிதுவே.

சின்ன காஞ்சீபுரமென்றும் பெரிய காஞ்சீபுரமென்றும் இரண்டு பாகுபாடுகளை யுடைய காஞ்சீபுரத்தில், கீழ் விவரித்த ஐந்து ஸன்னிதிகளும் சின்ன காஞ்சீபுரத் தைச் சார்ந்தவை, இனிமேல் விவரிக்கும் ஒன்பது ஸன்னிதிகள் பெரிய காஞ்சீபுரத் தைச் சார்ந்தவை.

(6) **ஊரகம்.** [உலகளந்த பெருமாள் ஸன்னிதி.] இங்கு த்ரிவிக்ரமனுடைய ஸேவை மிக அற்புதமானது. இவ்வளவு திருவளர்த்தியான திருமேனி மற்றெந்த திவ்யதேசத்திலுமில்லை. இப்பெருமான் இங்கு உரக ரூபியாகவும் ஸேவை ஸாதிப்பத னால் இத்தலத்திற்கு ஊரகமென்று திருநாமமாயிற்று. [உரகம்–ஸர்ப்பம்] இவர் மிக வரப்ரஸாதி. "ஊரகத்தான் திருமஞ்சன ப்ரார்த்தனை" என்பது உலகப்ரஸித்தம். இந்த ஸன்னிதியிலேயே பிரதக்ஷிணத்தில், (7) நீரகம், (8 காரகம்; (8) கார்வானம் என்ற கோயில்களுமுள்ளன. இவை திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம் பெற்றவை, (10) பரமேச்சுர விண்ணகரமென்கிற வைகுண்டபெருமாள் ஸன்னிதி, (11) பவளவண்ணர் ஸன்னிதி, (12) பாடகம் என்கிற பாண்டவதூதர் ஸன்னிதி, (13) ஏகாம்ரநாதர் கோவிலென்கிற சிவாலயத்திற்குள் நிலாத்திங்கள் துண்டப்பெரு மாளும், (14) காமாக்ஷியம்மன் கோவிலுக்குள் **கள்வர்** என்கிற பெருமாளும் எழுந் தருளியுள்ளார்கள். ஆக 14 திவ்ய தேசங்களே ஆழ்வார் பாடல் பெற்றவை காஞ்சீ புரியில் உள்ளன.

## திருப்புட்குழி

காஞ்சீபுரிக்கு 8–வது மைலில் திருப்புட்குழி யென்கிற மிகச் சிறந்த திவ்யதேச முளது. அது விஜயராகவப் பெருமாள் ஸன்னிதி. (பஸ் மார்க்க முண்டு.)

இவற்றுக்கு மங்களாசாஸன விவரணம்:

தேவப்பெருமாள் [திருவத்தியூரான் — வரந்தரும் மாமணி வண்ணன்] பூதத் தாழ்வாரும் திருமங்கையாழ்வாரும்.

திருவெஃகா—பொய்கையாழ்வார், பேயார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார்

அட்டபுயகரமும் வேளுக்கையும்—பேயாழ்வார், திருமங்கையாழ்வார்.

திருத்தண்கா, நிலாத்திங்கள்துண்டம், கள்வன், பவளவண்ணன், ஊரகம், நீரகம், காரகம், கார்வானம், பரமேச்சுரவிண்ணகரம் திருப்புட்குழி—இவை திருமங்கை யாழ்வாரொருவரே.

பாடகம்—பூதத்தாழ்வார் பேயாழ்வார் திருமழிசையாழ்வார் திருமங்கையாழ்வார்.

அட்டபுயம், பரமேச்சுரவிண்ணகரம் இரண்டு திருப்பதிகள் மாத்திரம் பதிகம் பாடப் பெற்றவை. இவையெல்லாம் காஞ்சீபுரம் ஸ்டேஷனிலிருந்து சென்று ஸேவிக் கத்தக்கவை.

கூரத்தாழ்வானுடைய அவதாரஸ்தலமான கூரம் காஞ்சீபுரத்திற்கு 8 மைல் தூரத்திலுள்ளது. (பஸ் வசதியுள்ளது.)

எம்பாருடைய அவதாரஸ்தலமான மதுரமங்கலம் காஞ்சீபுரத்திற்கும் ஸ்ரீபெரும் பூதூருக்கும் இடையில் விலகியுள்ளது. (வண்டி மார்க்கமும் பஸ் மார்க்கமும்.)

ஸ்ரீராமாநுஜரென்கிற எம்பெருமானருடைய திருவவதாரஸ்தலமான ஸ்ரீபெரும் பூதூர் சென்னைக்கும் காஞ்சிக்கும் நன்னடுவிலுள்ளது. (பஸ் மார்க்கம்.) திருக்கச்சி நம்பிகள் திருவவதாரஸ்தலமான பூவிருந்தவல்லி (பூனமல்லி) யும், திருமழிசையாழ்வா ருடைய திருவவதாரஸ்தலமான திருமழிசை யும், முதலியாண்டான் திருவவதாரஸ்தல மானபச்சைப்பெருமாள்கோயிலும் ஸ்ரீபெரும்பூதூருக்கும் சென்னைக்குமிடையிலுள்ளன.

மதுராந்தகம், ஏரிகாத்தராமன் ஸ்ன்னிதி. பெரிய நம்பிகள் உடையவர்க்குப் பஞ்ச ஸம்ஸ்காரம் ப்ரஸாதித்தருளிய புண்யக்ஷேத்ரம். (ஆழ்வார் பாடல் இல்லை யாயினும் ஆசாரியர்கள் உகந்தவிடம். செங்கற்பட்டு-விழுப்புரம் இடையில் மதுராந் தகம் ஸ்டேஷனுள்ளது)

ஆக இவ்வளவும் தொண்டை நாட்டு ஸ்தலங்கள்.

# நடுநாட்டுத் திருப்பதிகள் இரண்டு

## திருக்கோவலூர்

பொய்கையார் பூதத்தார் பேயார் என்கிற முதலாழ்வார்கள் மூவரும் ஒன்று சேர்ந்து உய்ந்த அற்புதமான மிகப் பெரிய திவ்யதேசம். பொய்கையார் பூதத்தார் திருமங்கையாழ்வார்களுடைய மங்களாசாஸனம். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். வில்லுபுரம்-காட்பாடி இடையிலுள்ள திருக்கோயிலூர் ஸ்டேஷன்.)

## திருவயிந்திரபுரம்

எம்பெருமான்—அடியவர்க்கு மெய்யன், தாஸஸத்யன். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (வில்லுபுரம்—தஞ்சாவூர்ப்பதையில் திருப்பாப்புலியூர் Cuddalore N. T. ஸ்டேஷன்)

# சோழநாட்டுத் திருப்பதிகள் 40

## 1 தில்லைத் திருச்சித்திரகூடம்

சிதம்பரத்தில் நடராஜன் ஆலயத்தினுள் ஸேவை ஸாதிக்கும் கோவிந்தராஜன் ஸன்னிதி. குலசேகராழ்வார் ஒரு பதிகமும், திருமங்கையாழ்வார் இரண்டு பதிகமும் பாடியுள்ளார். (சிதம்பரம் ஸ்டேஷன்)

இங்கிருந்து ஸ்ரீமுஷ்ணமும் காட்டுமன்னார் ஸன்னிதியும் சென்று ஸேவிக்கத் தகுந்தவை. ஸ்ரீமுஷ்ணம் – பூவராஹப் பெருமாள் ஸன்னிதி. (ஆழ்வார் பாடலில்லை யெனினும் மிகச்சிறந்த புராணஸ்தலம். பஸ் மார்க்கம். விருத்தாசலம் ஸ்டேஷனி லிருந்து வண்டி மார்க்கமுமுண்டு) காட்டுமன்னார் ஸன்னிதி—ஸ்ரீமந்நாதமுனிகளும் ஆளவந்தாரும் திருவவதரித்தஸ்தலம். மன்னார் என்கிற எம்பெருமானது ஸன்னிதனமும் சிறப்புற்றது.

## 2 காழிச் சீராமவிண்ணகரம்

[சீர்காழி—தாடாளன் ஸன்னிதி] இங்கு உலகளந்த பெருமாள். திருமங்கை யாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். [சீயாழி ஸ்டேஷன்]

## 3 திருவாலி திருநகரி

வயலாலி மணவாளன் ஸன்னிதி—திருநகரிக்கு அருகில் திருவாலியென்று தனியே ஒரு திவ்யதேசமுண்டு. குலசேகராழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களா சாஸனம். திருமங்கையாழ்வார் மூன்று பதிகம் பாடியுள்ளார். அவ்வாழ்வாரின் திரு வவதார ஸ்தலமுமிங்கே.திருக்குறையலூர் (சீயாழி ஸ்டேஷன் வழி) வண்டிமார்க்கமே.

## 4—14 திருநாங்கூர்த் திருப்பதிகள்—பதினொன்று

1. மணிமாடக்கோயில், 2. வைகுந்தவிண்ணகரம், 3. அரிமேயவிண்ணகரம், 4. திருத்தேவனார் தொகை (கீழைச்சாலை—மாதவப்பெருமாள் கோவில்), 5. வண் புருடோத்தமம், 6. செம்பொன்செய்கோயில், 7. திருத்தெற்றியம்பலம், 8. திருமணிக் கூடம், 9. காவளம்பாடி, 10. திருவெள்ளக்குளம், 11, பார்த்தன்பள்ளி. இவை பதினொன்றும் திருநாங்கூரைச்சுற்றி அருகிலும் தூரத்திலுமுள்ளவை; திருமங்கையாழ் வாருடைய மங்களாசாஸனம் பெற்றவை. ஒவ்வொரு திருப்பதிக்கும் ஒவ்வொரு பதிகம் பாடல். சீயாழி ஸ்டேஷனிலிருந்தே போக வேணும்; வண்டி மார்க்கம்.) ... *

## 15 தலைச்சங்க நாண்மதியம்

(தலைச்சங்காடு) பூதத்தாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசாஸனம். வயற் காட்டிலுள்ள ஏகாந்தமான சிறுகோயில். (மாயவரம் தரங்கம் பாடி லயனில் ஆக்கூர் ஸ்டேஷனிலிருந்து 2மைல்). ... ... ... ... *

## 16 திருவிந்தளூர்

பரிமளரங்கன் ஸன்னிதி. திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்–ஒரு பதிகம். (மாயவரம் ஸ்டேஷன்.) திருவிழந்தூர் என்பது தவறான வழக்கு. ... ... *

## 17 சிறுபுலியூர்

சலசயனப்பெருமாள். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்—ஒரு பதிகம். (மாயவரம், பேரளம், கொல்லுமாங்குடி, மங்கநல்லூர் இந்த 4 ஸ்டேஷன்களிலிருந்தும் போகலாம்.) ... ... ... ... ... ... *

## 18 திருநாகை

[நாகப்பட்டணம்] ஸௌந்தர்யராஜப்பெருமாள் ஸேவை மிக அற்புதம். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (நாகப்பட்டணம் ஸ்டேஷன்.) ... *

## 19 திருக்கண்ணங்குடி

சாமமாமேனிப்பெருமாள். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (திருவாரூர் ஜங்ஷனிலிருந்து கீவளூர் ஸ்டேஷனில் இறங்கி இரண்டு மைல் செல்ல வேணும்.) ... ... ... ... ... ... *

## 20 திருக்கண்ணமங்கை

பத்தராவி (பக்தவத்ஸல)ப் பெருமாள். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (திருவாரூர் ஸ்டேஷனிலிருந்து 4 மைல்) ... — *

## 21 திருக்கண்ணபுரம்

சௌரிராஜப்பெருமாள்-நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார் ஆகிய ஐவருடைய மங்களாசாஸனம். நம்மாழ்வாரும் குலசேகராழ்வாரும் ஒவ்வொரு பதிகம்; பெரியாழ்வாரும் ஆண்டாளும் துண்டுப் பாசுரம். திருமங்கையாழ்வார் 100 பாசுரம். (பெரிய திருமொழியில் எட்டாம் பத்து பூர்த்தியாக.) நன்னிலம் ஸ்டேஷனிலிருந்து 4 மைல்.

*மண்டங்குடி* தொண்டரடிப்பொடி யாழ்வாருடைய திருவவதார ஸ்தலம் இந்த ப்ராந்தத்தில் உள்ளது. ... ... ... ... *

## 22 தேரழுந்தூர்

ஆமருவியப்பன். திருமங்கையாழ்வார் நான்கு பதிகம் பாடியுள்ளார். (பாசுரங்களில் அழுந்தூர் என்று மாத்திரமுள்ளது) மாயவரம் ஜங்ஷனுக்கடுத்த குத்தாலம் ஸ்டேஷனிலிருந்து 3 மைல் (தேரழுந்தூரென்கிற புது ஸ்டேஷனுமுண்டு) ... *

## 23 திருவெள்ளியங்குடி

கோலவில்லிராமன். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (மாயவரம்—கும்பகோணம் இடையில் திருவிடை மருதூர் ஸ்டேஷனிலிருந்து 6 மைல்; அல்லது கும்பகோணத்திலிருந்தும் செல்லலாம்.) ... ... ... *

## 24 திருவிண்ணகர்

இதுவே உப்பிலியப்பன் ஸன்னிதியென்பது. நம்மாழ்வார் ஒரு பதிகமும், திருமங்கையாழ்வார் மூன்று பதிகமும் பாடியுள்ளார். (திருநாகேச்வரம் ஸ்டேஷனிலிருந்து ஒரு மைல்; அல்லது கும்பகோணத்திலிருந்து 4 மைல் சென்று ஸேவிக்கலாம்.) ஒப்பிலியப்பன் என்பது ஸம்பிரதாயத் திருநாமம். [தன்னொப்பாரில்லப்பன்.] ... *

## 25 திருக்குடந்தை

ஆராவமுதன். இதுவே கும்பகோண க்ஷேத்ரமென்பது. சார்ங்கபாணிப் பெருமாள் ஸன்னிதியும் சக்ரபாணிப்பெருமாள் ஸன்னிதியுமுள்ளன.—பூதத் தாழ்வார் பேயாழ்வார் திருமழிசையாழ்வார் நம்மாழ்வார் பெரியாழ்வார் ஆண்டாள் திருமங்கை யாழ்வார் இவர்களுடைய மங்களாசாஸனம். நம்மாழ்வார் மாத்திரம் ஒரு பதிகம் பாடி யுள்ளார். (கும்பகோணம் ஸ்டேஷன்.) ... ... ... *

## 26 நந்திபுரவிண்ணகரம்

இது நாதன் கோயில் என்றே ப்ரஸித்தமாக வழங்கும். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (கும்பகோணத்திலிருந்து தெற்கே 3 மைல் உள்ளது.) *

## 27 திருநறையூர்

இது நாச்சியார் கோயிலென்றே பிரஸித்தமாக வழங்கும். திருமங்கையாழ்வார் நூறு பாசுரம் பாடி யுள்ளார். (கும்பகோணத்திலிருந்து 6 மைல். பஸ் மார்க்கம்.)

## 28 திருச்சேறை

ஸாரநாதப் பெருமாள். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (நெ. 27 திருநறையூரிலிருந்து 3 மைல் பஸ் மார்க்கம்.)

*ராஜமன்னார் ஸன்னிதி.* மன்னார்குடி யென்று வழங்கும். மிகப் பெரிய ஸன்னிதி. மணவாள மாமுனிகளால் திவ்ய தேசமாக்கப் பெற்றது. (மன்னார்குடி யென்றே ஸ்டேஷன்.)

*வடுவூர்.* இதுவும் ஆழ்வார் பாடல் பெற்ற திவ்ய தேசமன்றாகிலும் இங்கு பரம ஸுந்தரமான இராமபிரான் திருக்கோலம் ஸேவிக்கத்தக்கது. மன்னார்குடிக்கு 10 மைல் தூரத்திலுள்ளது.

*தில்லைவிளாகம்* என்கிற க்ஷேத்திரமும் ஸேவிக்கத் தக்கது. ... *

## 29 ஆதனூர்

திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம். (கும்பகோணத்திலிருந்து சுவாமி மலை வழியாய் 5 மைல் தூரத்திலுள்ளது.) ... ... ... *

## 30 புள்ளம்பூதங்குடி

சக்ரவர்த்தி திருமகன் ஸன்னிதி. திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள் ளார். (சுவாமிமலையிலிருந்து 3 மைல்.) ... ... ... *

## 31 கபிஸ்தலம்

திருமழிசையாழ்வார் மங்களாசாஸனம். (கும்பகோணம் தஞ்சாவூர் இடையில் பாபநாசம் ஸ்டேஷனிலிருந்து 2மைல்.) *ஆற்றங்கரை கிடக்கும் கண்ணன்.* ... *

## 32 கூடலூர்

ஆடுதுறைப் பெருமாள்கோயில் என வழங்கும். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (நெ. 31 கபிஸ்தலத்திலிருந்து மேற்கே 3 மைல்.) ... *

## 33 தஞ்சைமாமணிக்கோயில்

தனித்தனியாக மூன்று ஸன்னிதிகள் உள்ளன. பூதத்தாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களா சாஸனம். (தஞ்சாவூர் ஸ்டேஷன்.) ... ... *

## 34 கண்டியூர்

அரன்சாபம் தீர்த்த பெருமாள். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். (தஞ்சாவூர் ஸ்டேஷனிலிருந்து திருவையாறு (Tiruvadi) வழியில் 6 மைல் தூரத்திலுள்ளது.) ... ... ... ... ... *

## 35 திருப்பேர்நகர்

அப்பக்குடத்தான் ஸன்னிதி யென்றும் கோயிலடி யென்றும் வழங்கும். திருமழிசையாழ்வார் நம்மாழ்வார் பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களா சாஸனம். நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் பதிகம் பாடியுள்ளார்கள். (லால்குடி ஸ்டேஷனிலிருந்தும் ஸ்ரீரங்கத்திலிருந்தும் செல்லலாம்.) ... ... ... *

## 36 அன்பில்

திருமழிசையாழ்வார் மங்களாசாஸனம். (லால்குடி ஸ்டேஷனிலிருந்து 5 மைல்) நெ. 35 திருப்பேர் நகரையும் இதையும் ஒருங்கே ஸேவிக்கலாம். ... ... *

## 37 ஸ்ரீரங்கம்

உலகமறிந்த புகழ்படைத்த இத்தலத்தைப்பற்றி என்ன எழுதுவது. ஆழ்வார்கள் பதின்மரும் ஆண்டாளும் மங்களாசாஸனஞ் செய்த தலம். ஸகல ஆசாரியர்களும் படுகாடு கிடந்த ஸ்தலம். (ஸ்ரீரங்கம் ஸ்டேஷன்.) ... ... *

## 38 உறையூர்

"கோழி" என்கிற பெயரால் திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம். திருப்பாணாழ்வார் திருவவதார ஸ்தலம். (திருச்சிக் கோட்டை ஸ்டேஷனிலிருந்து ஒரு மைல்.) ... ... ... ... ... *

## 39 கரம்பனூர்

உத்தமர்கோயில் என்பது இதுவே. திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம் ஸ்ரீரங்கத்திலிருந்து திருவெள்ளறைக்குப் போகும் வழியிலே 3 மைலில் உள்ளது. *

## 40 திருவெள்ளறை

புண்டரீகாக்ஷப் பெருமாள். உய்யக்கொண்டார் எங்களாழ்வான் இவர்களின் திருவவதார ஸ்தலம். பெரியாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களா சாஸனம். இருவரும் பதிகம் பாடியுள்ளார்கள். ஸ்ரீரங்கத்திலிருந்து 10 மைல். ... ... *

— ஆக இவ்வளவும் சோழநாட்டுத் திருப்பதிகள். —

# பாண்டிநாட்டுத் திருப்பதிகள் 18

## 1 தென்மதுரை

திருக்கூடல் என்கிற பெயரால் திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம் ஸுந்தரராஜப் பெருமாள். (மதுரை ஸ்டேஷன்.) ... ... *

## 2 திருமோகூர்

காளமேகப்பெருமாள். நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களா சாஸனம். நம்மாழ்வார் மாத்திரம் பதிகம் பாடி யுள்ளார். (மதுரையிலிருந்து 7 மைல்.) ... *

## 3 திருமாலிருஞ்சோலை

இது அழகர்கோயில் என்றும், கள்ளழகர் ஸன்னிதி யென்றும் வழங்கும். பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையார் மங்களாசாஸனம். பல பதிகங்கள் பாடியுள்ளார்கள். (மதுரையிலிருந்து பஸ் மார்க்கம் 12 மைல்.) ... ... — ... ... ... *

## 4 திருமெய்யம்

திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். ஸத்யநாதன். (திருச்சி மானாமதுரை லயனில் திருமயம் ஸ்டேஷன் புதுக்கோட்டை யிலாகா.) ... ... *

## 5 திருக்கோட்டியூர்

ஸௌம்யநாராயணப் பெருமாள். திருக்கோட்டியூர்நம்பிகளின் திருவவதார ஸ்தலம். பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். பெரியாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் பதிகம் பாடியுள்ளார்கள். (மானாமதுரை, சிவகங்கை, காரைக்குடி, கல்லல் முதலிய பலவிடங்களிலிருந்து செல்லலாம். பஸ் மார்க்கம்; ... ... ... *

## 6 திருப்புல்லாணி

இராமன். திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம். பதிகம் பாடியுள்ளார். திருவணை யாத்திரையில் ஸேவிக்க வேண்டிய பெருமாள். ராமநாதபுரத்திலிருந்து 6 மைல். ... ... ... ... ... ... *

## 7 திருத்தண்கால்

திருத்தாங்கல் எனத் தவருக வழங்குவர். பூதத்தாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். சிவகாசி ஸ்டேஷனிலிருந்து 2 மைல். ஸ்ரீ வில்லிபுத்தூர் ஸமீபம்.

## 8 ஸ்ரீவில்லிபுத்தூர்

வடபெருங்கோயிலுடையான் ஸன்னிதி மிக அற்புதமானது. பெரியாழ்வார், ஆண்டாள் மங்களாசாஸனம். அவ்விருவருடையவும் திருவவதார ஸ்தலம். விருதுநகர் தென்காசி லயனில் ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்டேஷன். ... ... *

# ஆழ்வார் திருநகரியும், நவதிருப்பதிகளும்

## 9 திருக்குருகூர்

இதுவே ஆழ்வார் திருநகரி என்பது. பொலிந்து நின்றபிரான் ஸன்னிதி. நம்மாழ்வார், மணவாளமாமுனிகள் திருவவதார ஸ்தலம். நம்மாழ்வாருடைய மங்களா

சாஸனம். ஒரு பதிகம் பாடியுள்ளார். ஆழ்வார் திருநகரி ஸ்டேஷன். திருநெல்வேலியிலிருந்து பஸ் மார்க்கமுமுண்டு. ... ... ... ... *

## 10 திருக்கோளூர்

வைத்தமாநிதிப் பெருமாள். மதுர கவிகளின் திருவவதார ஸ்தலம். நம்மாழ்வாருடைய மங்களாசாஸனம் ஒரு பதிகம் பாடியுள்ளார். ... ... *

## 11 தொலைவில்லி மங்கலம்

இங்கே தேவபிரான் ஸன்னிதியும் அரவிந்த லோசனன் ஸன்னிதியுமாக இரண்டு ஸன்னிதிகள் இருப்பதனால் இரட்டைத் திருப்பதி யென்றே இத்தலம் வழங்கும். நம்மாழ்வார் மங்களாசாஸனம். ஒரு பதிகம். ... ... *

## 12 தென்திருப்பேரை

மகரபூஷணன். நம்மாழ்வாருடைய மங்களாசாஸனம். ஒரு பதிகம். [பேரெயில்.]

## 13 திருக்குளந்தை

மாயக்கூத்தன். பெருங்குளம் என வழங்கும். நம்மாழ்வார் துண்டுப் பாசுரம்.

## 14 ஸ்ரீவைகுண்டம்

கள்ளப்பிரான், நம்மாழ்வாருடைய மங்களா சாஸனம். துண்டுப் பாசுரம். ஸ்ரீவைகுண்டம் ஸ்டேஷன். ... ... ... ... ... *

## 15 வரகுணமங்கை

நத்தம் என வழங்குவர். நம்மாழ்வார் மங்களாசாஸனம். துண்டுப் பாசுரம்.

## 16 திருப்புளிங்குடி

காய்சினவேந்து. மிகஆச்சரியமானசயனத்திருக்கோலம். நம்மாழ்வார் பாடல். பதிகம். ஆக இந்த நவதிருப்பதிகளையும் ஆழ்வார் திருநகரியைச் சுற்றி ஸேவிக்க.

## 17 சிரீவரமங்கை

வானமாமலை யென்பது இதுவே. நாங்குனேரியென வழங்குவர். தெய்வநாயகப் பெருமாள், தோதாத்ரிநாதன். நம்மாழ்வார் மங்களாசாஸனம் ஒரு பதிகம். (திருநெல்வேலியிலிருந்து 20 மைல் பஸ் மார்க்கம்.) ... ... *

## 18 திருக்குறுங்குடி

நம்பி. திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். நம்மாழ்வார் ஒரு பதிகமும், திருமங்கையாழ்வார் இரண்டு பதிகங்களும் பாடியுள்ளார்கள். வானமாமலையிலிருந்து 8 மைல் தூரத்திலுள்ளது. சேர்மாதேவி ஸ்டேஷனிலிருந்தும் செல்லலாம். 18 மைல் பஸ். ... ... *

— பாண்டிநாட்டுத் திருப்பதிகள் முற்றுப் பெற்றன. —

# இனி மலைநாட்டுத் திருப்பதிகள் 13

## 1 திருவண்பரிசாரம்

திருவாழ்மார்பன். திருப்பதிசாரமென வழங்குவர். நம்மாழ்வாரின் திருத்தாயாரான உடைய நங்கையார் அவதரித்த தலம் இதுவே. நம்மாழ்வாருடைய மங்களாசாஸனம். (நாகர்கோயில் சமீபம் பஸ் மார்க்கம்.) ... ... ... *

## 2 திருவாட்டாறு

நம்மாழ்வார் மங்களாசாஸனம். ஒரு பதிகம். (திருவனந்தபுரம் பஸ் மார்க்கம்.)

## 3 திருவனந்தபுரம்

(அனந்தபத்மநாபன்) நம்மாழ்வார் மங்களாசாஸனம். ஒரு பதிகம் (திருவனந்தபுரம் ஸ்டேஷன்.) * ஜநார்த்தனம் * இது ஆழ்வார் பாடல்பெற்ற ஸ்தலமன்றிலும் மிகச் சிறந்த புராண ஸ்தலம். (வற்கலா ஸ்டேஷன்.) ... ... *

## 4 திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு

நம்மாழ்வார் மங்களாசாஸனம் ஒரு பதிகம். (திருவனந்தபுரம் கொல்லம் லயனில் கொட்டாரகரா என்கிற ஸ்டேஷனில் இறங்கி பஸ் மார்க்கம் சென்று இந்த திவ்ய தேசத்தையும் மேலுள்ள ஐந்து திவ்யதேசங்களையும் ஸேவிப்பது.) புதிய ரைல் மார்க்கமுமுண்டு. ... ... ... ... ... *

## 5 திருவண்வண்டூர்

நம்மாழ்வார் மங்களாசாஸனம் ஒரு பதிகம். (இது நெ. 4 திவ்ய தேசத்திலிருந்து 5 மைல்.) பஸ் மார்க்கம். ... ... *

## 6 திருவாறன்விளை

ஆரம்முளையென வழங்குவர். நம்மாழ்வார் மங்களாசாஸனம் ஒரு பதிகம் (நெ. 4 திவ்ய தேசத்திலிருந்து 7 மைல்.) பஸ். ... ... *

## 7 திருவல்லவாழ்

திருவல்லாய் என வழங்குவர். நம்மாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் ஒவ்வொரு பதிகம் பாடியுள்ளார்கள். (நெ 5 திவ்யதேசத்திலிருந்து 4 மைலிலுள்ளது.) பஸ்.

## 8 குட்டநாட்டுத் திருப்புலியூர்

நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசாஸனம். நம்மாழ்வார் மாத்திரம் ஒரு பதிகம். (நெ. 4 திவ்ய தேசத்திலிருந்து தெற்கே 3 மைல்) பஸ். ... *

## 9 திருக்கடித்தானம்

நம்மாழ்வார் மங்களாசாஸனம். ஒரு பதிகம். (நெ. 7 திவ்ய தேசத்திலிருந்து செங்கணூஞ்சேரி வழியாய் 7 மைல்) பஸ். ... ... ... *

## 10 திருக்காட்கரை

நம்மாழ்வார் மங்களாசாஸனம். ஒரு பதிகம். (ஏரணாகுளம் ஷோரனூர் லயனிலுள்ள இடைப்பள்ளி ஸ்டேஷன்.) வண்டி மார்க்கம்.(நவீன வசதிகள் கேட்டுணர்க.)

### 11 திருமூழிக்களம்

நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசாஸனம். நம்மாழ்வார் ஒரு பதிகம். ஏரணுகுளம் ஷோரனூர் லயனிலுள்ள அங்கமாலி ஸ்டேஷனிலிருந்து 7 மைல் போகவேணும்.) வண்டிமார்க்கம். ... ... ... *

### 12 திருவித்துவக்கோடு

திருமிற்றக்கோடு என வழங்குவர். குலசேகராழ்வார் மங்களாசாஸனம் ஒரு பதிகம். (ஷோரனூர் ஸமீபத்திலுள்ள பட்டாம்பி ஸ்டேஷனிலிருந்து 2 மைல்.) கால்நடை. ... ... ... ... ... *

### 13 திருநாவாய்

நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசாஸனம். [கள்ளிக்கோட்டை லயனில் எடகோலம் ஸ்டேஷனிலிருந்து ஒரு மைல்.)

குலசேகராழ்வாருடைய திருவவதார ஸ்தலமான திருவஞ்சிக்களம் என்னுமூர் திருச்சூர் ஸமீபத்தில் இரிஞாலகுடா ஸ்டேஷன் வழியாய்ச்சென்று ஸேவிக்கத்தக்க தெ ்பர். அஞ்சைக்களம் என வழங்குவர். மலைநாட்டுத் திருப்பதிகள் விஷயமாக நமது பெரிய வெளியீடுமொன்றுண்டு காணத்தக்கது. (திருக்கோயில் பத்திரிகையில்.)

— மலைநாட்டுத் திருப்பதிகள் முற்றும். —

## வடநாட்டுத் திருப்பதிகள்

வட இந்தியாவில் ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற திவ்ய தேசங்கள் [அர்ச்சாவதார ஸன்னிதிகள்] இல்லையாயினும் அவர்கள் உகந்தருளின க்ஷேத்ரங்களும் தீர்த்தங்களும் பல இருக்கின்றன. அவை தவிர புராண ஸ்தலங்களும் பல இருக்கின்றன. அவற்றைப்பற்றி விரிவாகவே கீழே யெழுதியாயிற்று. நூற்றெட்டுத் திருப்பதிகள் என்கிற கோவையில் சேர்ந்த ஸ்தலங்களை மாத்திரம் சுருக்கமாக இப்போது இங்கே தெரிவிக்கிறோம்.

### திருவேங்கடம்

(திருமலை திருப்பதி.) இத்தலம் தொண்டரடிப்பொடியாழ்வாரொருவர் தவிர மற்ற ஒன்பது ஆழ்வார்களாலும் மங்களாசாஸனம் செய்யப்பெற்றது. உலகமெல்லா மறிந்த வைபவம்பொருந்திய இத்தலத்தின் பெருமையைப்பற்றி இங்கு நாம் அதிகமாக எழுதவேண்டிய அவசியமுமில்லை. இவ்விடத்தில் ஸ்ரீமத் பெரிய ஜீயர் ஸ்வாமி மடம், சின்ன ஜீயர் ஸ்வாமி மடம், பரகால ஸ்வாமி மடம், அஹோபிலமடம் முதலிய ஸ்ரீவைஷ்ணவ மடங்கள் ஸ்வாமிகளுக்கு வஸதி ஸௌகரியமளிப்பவை. இவை தவிர ஆசார்ய புருஷர்களும் ராஜாக்களும் ஸேட்டுகளும் வைசியர்களும் பாகவதர்களும் ஏற்படுத்தியுள்ள திருமாளிகைகளும் தர்ம சாலைகளும் ராமாநுஜ கூடங்களும் ஸாதாரண ஜனங்களுக்கு உபயோகப் படுமவை. தேவஸ்தான அதிகாரிகளாலும் பல விடுதிகள் ஏற்பட்டிருக்கின்றன. லௌகிகர்களான மஹான்கள் தேவஸ்தான அதிகாரிகளுக்குத் தெரிவித்து அவ் விடுதிகளில் விசேஷ ஸௌகரிய மடைகிறார்கள்.

*கீழ்த்திருப்பதி. திருவேங்கட மலையின் அடிவாரத்திலுள்ள ஸ்தலம் இது. திருப்பதி கிழக்கு (Tirupati East) என்கிற ரைல் ஸ்டேஷனுக்கு ஒரு பர்லாங்கு தூரத்திலுள்ள ஸ்ரீ கோவிந்தராஜன் ஸன்னிதியே இத்தலம். இது நூற்றெட்டுத் திருப்பதிகளில் சேர்ந்த தன்றாகிலும் திருமலைக்கு சேஷ பூதமான ஸன்னிதியென்று நெடுநாளாகவே ஆதரிக்கப்படுகின்றது. எம்பெருமானார் காலத்தில் தில்லைத் திருச் சித்திரகூடத்திலிருந்து ஸ்ரீகோவிந்தராஜப் பெருமாள் இவ்விடத்திற்கு எழுந்தருளச் செய்யப்பட்டாரென்பர். இது காரணமாகவே இத்தலத்தில் நாடோறும் மாலையில் தோமாலை ஸேவையில் *வாடமருதிடை போகி* (பெரிய திருமொழி 3-3.) என்கிற தில்லைத்திருச்சித்திர கூடப்பதிகம் ஸேவிக்கப்படுகிறது. இங்கும் ஜீயர் ஸ்வாமிகளின் மடங்கள் தேவஸ்தான தர்மசாலைகள் வஸதி ஸௌகரியமளிப்பவை.

திருச்சுகனூர். (திருச்சானூர்) இது அலர்மேல்மங்கைத் தாயாருடைய திவ்ய க்ஷேத்திரம். கீழ்த் திருப்பதியிலிருந்து மூன்று மைல் தூரத்திலுள்ள தலம் இது. மிகப் பெரிய புஷ்கரிணியும் ஸுவர்ண முகரி மஹா நதியும் இங்கு உண்டு. மடங்களும் சத்திரங்களுமுண்டு. திருமலை திருப்பதி ஸேவிக்க வருமவர்கள் யாவரும் இத்தலம் ஸேவிப்பது நியதம். *சுகமஹர்ஷி தவம்புரிந்து ஸித்திபெற்ற தலமாதலால் இதற்கு சுகபுரி என்று பெயராயிற்று. அது தமிழில் திருச்சுகனூராயிற்று அதுவே திருச்சானூர் என்றும் சிரதானூரு என்றும் திரிபான வழக்கம் பெற்றது.

(சிங்கவேள்குன்றம்) இது மிகச் சிறந்த ந்ருஸிம்ஹ க்ஷேத்ரம். திருமங்கையாழ்வாரால் பத்துப் பாசுரங்களினால் மங்களா சாஸனம் செய்யப் பெற்ற தலமிது. [பெரிய திருமொழி 1-7. *அங்கண் ஞாலமஞ்ச* என்கிற பதிகம் காண்க.] இத்தலத்தைப் பாடிய அவ்வாழ்வார் 'தெய்வமல்லால் செல்லவொண்ணாச் சிங்கவேழ் குன்றமே' என்றதனால் இங்குச் சென்று ஸேவிப்பது மனிதர்களுக்கு மிக அருமையென்பது தெரியவரும். உண்மையில் மிகவும் சிரமப்பட்டே ஸேவிக்க வேண்டிய ஸ்தலமிது. இக்காலத்தில் சிறிது ஸௌகரியமுண்டு என்று சொல்லலாம். "மதராஸ்-பாம்பே" ரைல் பாதையில் கடப்பை Cuddapah ஸ்டேஷனிலிறங்கி (ஆள்ளகெட்ட) வழியாக மோடார் பஸ்ஸிலும் பிறகு மாட்டு வண்டியிலும் சென்று சேரலாம். ஸ்ரீமத் அழகியசிங்கரின் ஆதீன ஸ்தலம்.

திருநாராயணபுரம். (மேல் கோட்டை) இத்தலம் எம்பெருமானார் காலம் முதல் மிகவும் சிறப்புற்றோங்கி விளங்கும் திவ்ய க்ஷேத்ரம். யாதவாத்ரி யென்று ப்ரஸித்தி பெற்றது இது. மூலமூர்த்தி திருநாராயணப் பெருமாள். உத்ஸவமூர்த்தி செல்வப் பிள்ளை. (யதிராஜஸம்பத் குமாரர்.) இந்த க்ஷேத்ரத்தை உத்தரிக்க ஸ்ரீ யதிராஜர் மிகப் பாடுபட்ட இதிஹாஸங்கள் அறியத்தக்கன. இதன் ஸமீபத்தில் ஸ்ரீரங்கபட்டணம் தொண்டனூர் ஸாளக்ராமம் முதலாளவைகளும் விசாரித்து ஸேவிக்கத் தகுந்தவை.

"பெங்களூர்—மைஸூர்" ரைல் பாதையில் பாண்டவபுரம் என்னும் ஸ்டேஷனிலிருந்து மோட்டார் பஸ் மூலமாக (18 மைல் தூரத்தில்) அடையலாம். திருக்கல்யாணி முதலிய பல தடாகங்களும் ஏரியும் உள்ளன. மடங்களும் தர்மசாலைகளுமுண்டு.

(வடநாட்டுத் திருப்பதிகளுக்குப் பாசுரக் குறிப்பு)

**துவரை**—த்வாரகை; பெரியாழ்வார், ஆண்டாள்.
**வட மதுரை**—நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள்.
**ஆய்ப்பாடி**—(கோகுலம்) பெரியாழ்வார், ஆண்டாள்.
**விருந்தாவனம்**—ஆண்டாள்.
**அயோத்தி**—நம்மாழ்வார், பெரியாழ்வார், குலசேகராழ்வார்.
**நைமிசாரணியம்**—திருமங்கையாழ்வார் பதிகம்.
**கண்டமென்னுங் கடிநகர்**— தேவப்ரயாகை (பெரியாழ்வார் பதிகம்.
**பிரிதி**—(இடம் தெரியவில்லை) திருமங்கையாழ்வார் பதிகம்
**வதரி**—(பதரிகாச்ரமம்) பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் பதிகம்.
**சாளக்கிராமம்**—பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் பதிகம்.
**கோவர்த்தனம்**—ஆண்டாள், பெரியாழ்வார் பதிகம்.
திருநாட்டை நூற்றெட்டாவது திருப்பதியாகக் கொள்வர்.

— *தென்னாட்டுத் திருப்பதி யாத்திரை முற்றிற்று* —

## அடியேன் செய்யும் விண்ணப்பம் *P.B A.*

அடியேன் வடநாட்டுத் திருப்பதிகளையும் அவ்விடத்து க்ஷேத்ர தீர்த்தங்களையும், தென்னாட்டுத் திருப்பதிகளையுமெல்லாம் பன்முறை ஸேவித்திருக்கிறேன். ஸாளக்ராம க்ஷேத்ரமொன்றுதான் குறை. ஆழ்வார்தாமே *சாளக்கிராமமடைநெஞ்சே! என்றருளிச் செய்தபடியாலே அந்த க்ஷேத்திரத்தை நெஞ்சுதான் அடைந்திருக்கிறது. ஹரித்வாரம் வரையில் இருபத்து மூன்று பர்யாயமும், ஸ்ரீபதரிகாச்ரமத்திற்கு மூன்று பர்யாயமும், பஞ்சத்வாரகைகளுக்குப் பதினொரு பர்யாயமும் யாத்திரை செய்திருக்கிறேன். தென்னாட்டுத்திருப்பதிகளை ஸேவித்தது கணக்குக்கு வாராது. வடநாட்டு க்ஷேத்திரங்களில் தென்னாட்டுத் திருப்பதிகளிற் போல உத்ஸவாதிவைபவங்கள் இல்லையாயினும் ஒவ்வொரு க்ஷேத்திரத்திலும் அடியேனுடைய மனம் ஈடுபட்டிருந்தவிதம் வாசாமகோசரமானது. தென்னாட்டிலுள்ள நம்மவர்களெல்லாரும் வடநாட்டு க்ஷேத்திர தீர்த்தங்களை அவசியம் ஸேவிக்கவேணுமென்கிற விருப்பத்தினால் இந்த யாத்திரைவிளக்கை எனது நாற்பதாவது பிராயத்திலிருந்து அடிக்கடி வெளியிட்டுவருகிறேன். இதன் உதவிகொண்டு பலநூற்றுக்கணக்கான பக்தர்கள் வெகுசௌக்கியமாக யாத்திரை செய்துவந்ததாக நமக்கு அடிக்கடி தெரிவித்து வருகிறார்கள். நமக்கு இதுவொரு ஸுக்ருதவிசேஷமே. யாத்திரைசெய்ய சக்தியற்றவர்களும் இந்த யாத்திரை விளக்கை வாசித்தால் போதும். (வடநாட்டு க்ஷேத்ர தீர்த்தங்களைப்பற்றிச் சென்ற இதழில் (350ல்) விரிவாக வெளியிட்டிருக்கிறேன். ... ... ... *

ஸ்ரீமத்யை கோதாயை நம:

# ஸ்ரீ ஆண்டாள் அருளிய அஷ்டோத்தர சத நாமாவளி

(தையொருதிங்கள் பாமாலையிலிருந்து தொகுக்கப்பெற்றது)

(ஸ்ரீமதுபயவே. D. RAMASWAMI IYENGAR, Advocate.)

மார்கழித்திங்கள் ஒன்றுதான் ஆண்டாளுக்கான மாதம் என்பது பலர் நினைவு. அது திருப்பாவை அநுபவத்தின் பெருமையால் வருவது. ஆண்டாளுடைய அடுத்த நூல் நாச்சியார் திருமொழி. அது 143 பாசுரங்கள் கொண்டது. "தையொரு திங்களும் தரை விளக்கித் தண்மண்டலமிட்டு மாசி முன்னாள்" என்பது அதன் ஆரம்பப் பாசுரம். அந்த ப்ரபந்தத்தின் இரண்டாவது திருமொழியின் முதல் பாசுரத்தில்........ "காமன் போதருகாலமென்று பங்குனிநாள் கடைபாரித்தோம்" என்றுள்ளது. ஆகவே இந்த நாச்சியார் அவதரித்தது ஆடிமாதம். மார்கழி, தை, மாசி, பங்குனி, இந்த நான்கு மாதங்கள் ஆண்டாள்பாசுரம் பெற்ற மாதங்கள். நாச்சியார் திருமொழி யென்னும் பிரபந்தத்திற்குத் 'தையொரு திங்கட் பாமாலை' என்றே நாமகரணம்செய்கிறார் தேசிகர் பெருமான். அந்தப் பாமாலையில் திகழும் எம்பெருமானுடைய திருநாமங்களைத்தொகுத்து ஒடு அஷ்டோத்தரமாகப் புனைந்து அவருக்கே ஸமர்ப்பிக்கவேண்டும் எனும் ஆசை தூண்ட இச்சிறுபணி இப்போது இச்சிறியேனால் மேற்கொள்ளப்படுகிறது.

"உன் தன்னைச் சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே" என்று திருப்பாவையில் அபசார க்ஷமாபணம் வேண்டிய கோதை, மேல்பிரபந்தத்தில் அடியிற்காணும் பெயர்களை இட்டு அவனைப் பேசுகிறாள். அவைகளை உற்று நோக்குங்கால் அவள் உள்ளத்தில் ஓடும் அடங்காக் காதல் ஒரு படியாக நமக்குப்புலப்படும். இந்த அழகிய அஷ்டோத்திர சத நாமாவளி பின்வருமாறு:—

1 கருவுடைமுகில்வண்ணன் 2 காயாவண்ணன் 3 கருவிளைபோல்வண்ணன் 4 தீமைசெய்யும் சிரீதரன் 5 குண்டுநீருறைகோளரி 6 மதயானை கோள்விடுத்தான் 7 தெண்டிரைக் கடற்பள்ளியான் 8 பெய்யுமா முகில்போல்வண்ணன் 9 செய்ய தாமரைக்கண்ணினன் 10 இலங்கையைப் பூசலாக்கிய சேவகன் 11 ஓதமா கடல் வண்ணன் 12 சேதுபந்தம் திருத்தினன் 13 சுடர்சக்கரம் கையிலேந்தினன் 14 சீதைவாயமுதமுண்டான் 15 அரவணைமேல் பள்ளிகொண்டான் 16 மதுவின் தாழாய்முடிமால் 17 குதிகொண்டரவில் நடித்தான் 18 இரக்கமேலொன்று மிலாதான் 19 இலங்கை யழித்தபிரான் 20 கோலங்கரியபிரான் 21 குடங்களெடுத்தேற விட்டுத் கூத்தாடவல்லவெங்கோ 22 நீதியல்லாதன செய்தான் 23 ஊழியெல்லா முணர்வான் 24 கோமளவாயர் கொழுந்து 25 மசிமையிலி 26 கன்றுமேய்த்து விளையாடுங் கோவலன் 27 வெள்ளைவிளிசங்கிடங்கையில்கொண்ட விமலன் 28 பொன்புரைமேனிக் கருளக் கொடியுடைப் புண்ணியன் 29 சார்ங்கம் வளைய வலிக்கும் தடைக்கைச் சதுரன் 30 பைங்கிளிவண்ணன் 31 சங்கொடு சக்கரத்தான் 32 விண்ணுற நீண்டடிதாவிய மைந்தன் 33 கோவிந்தனென்பானோர்காளை 34 பூப்புனைக் கண்ணிப்புனிதன் 35 மதுரையார்மன்னன் 36 மைத்துனன் நம்பி 37 காய்சின மாகளிறன்னான் 38 நம்மையுடையவன் 39 அரிமுகனச்சுதன் 40 மருப்பொசித்த மாதவன் 41 நின்ற புணர்மருதம் சாபம் தீர்த்தான் 42 செங்கண் கருமேனி வாசுதேவன் 43 என்னை நலங்கொண்ட நாரணன் 44 சுந்தரத்தோளுடையான்

45 ஏறு திருவுடையான் 46 மாலிருஞ்சோலை நின்ற சுந்தரன் 47 கொல்லை பரக்கியை மூக்கறித்திட்ட குமரன் 48 ஆடுங்கருளக் கொடியான் 49 பணமாடரவணைப் பற்பல காலமும் பள்ளிகொள் மணவாளன் 50 குடமாடுகூத்தன் 51 கோமிறை செய்தெம்மை உடைமாடுகொண்டான் 52 அழகப்பிரானர் 53 உடலுள் புகுந்து நின்று ஊறலறுக்கின்ற மாயன் 54 நாகணைமிசை நம்பரர் 55 செல்வர் 56 பெரியர் 57 தீ முகத்து நாகணைமேல் சேரும் திருவரங்கர் 58 என்னரங்கத் தின்னமுதர் 59 குழலழகர் 60 வாயழகர் 61 கண்ணழகர் 62 கொப்பூழில் எழுகமலப்பூவழகர் 63 எம்மானர் 64 செங்கோலுடைய திருவரங்கச் செல்வனர் 65 பச்சைப் பசுந்தேவர் 66 நான்மறையின் சொற்பொருளாய் நின்றார் 67 மானமிலாப் பன்றியாம் தேசுடைய தேவர் 68 பெண்ணுளன் 69 மாதவனென்பதோரன்பு 70 பெற்றிருந் தாளை யொழியவே போய்ப்பேர்த்தொருதாயில் வளர்ந்தநம்பி 71 மாணியுருவாய் உலகளந்தமாயன் 72 குறும்பு செய்வான் 73 கண்ணனென்னும் கருந்தெய்வம் 74 பெண்ணின் வருத்தமறியாத பெருமான் 75 பாலாலிலையில் துயில்கொண்ட பரமன் 76 கஞ்சைக் காய்த்த கருவில்லி 77 அஞ்சேலென்னுனெவனொருவன் 78 ஆயர்பாடி கவர்ந்துண்ணும் காரேறு 80 அழிலும் தொழிலு முருக்காட்டான் 81 கொடிய கடிய திருமால் 82 போட்கன் 83 வெற்றிக்கருளக் கொடியான் 84 கொள்ளை கொள்ளிக் குறும்பன் 85 கோவர்த்தனன் 86 அல்லல்விளைத்த பெருமான் 87 ஆயர் பாடிக் கணிவிளக்கு 88 பலதேவர்க்கோர் கீழ்க்கன்று 89 குணுங்குநாறிக்குட்டேறு 90 மாலாய்ப்பிறந்த நம்பி 91 மாலேசெய்யும் மணாளன் 92 ஏலாப்பொய்களுரைப் பான் 93 ஏதுமொன்றும் கொளத்தாரா ஈசன் 94 வீதியார வருவான் 95 தரும மறியாக் குறும்பன் 96 பொருத்தமிலி 97 விரிபுங்கதிரே போல்வான் 98 பொருத்த முடைய நம்பி 99 புறம்போலுள்ளும் கரியான் 100 விருத்தம் பெரிதாய் வருவான் 101 வெளியசங்கொன்றுடையான் 102 பீதகவாடையுடையான் 103அளிநன்குடைய திருமால் 104 அழியான் 105 வீட்டைப்பண்ணி விளையாடும் விமலன் 106 வேட்டையாடி வருவான் 107 பருந்தாள் களிற்றுக் கருள்செய்த பரமன் 108 பெருந்தாளுடைய பிரான்.

ஸஹஸ்ரநாமத்தை யருளிச்செய்த ஸ்ரீ பீஷ்மாசாரியர் 'யாநி நாமாநி கௌணாநி' என்றுகூறி, குணங்களையிட்டு ஏற்பட்டவை அவ்வாயிரநாமமும்என்பதைவிளக்கினர். ஆனல் நம் ஆண்டாள் இட்டிருக்கும் திருநாமங்கள் எம்பெருமானுடைய குணங்களை மட்டும் பாராட்டுவதோடு நில்லாமல் அவனுடைய அகுணங்களையும் (குணங்களாகாத வைகளையும்) பாடுவனவாகக் காண்கின்றன. "ராமோ விக்ரஹவான்தர்ம:" என்றும் "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்" என்றும் "தர்மகுப் தர்மக்ருத்தர்மீ" என்றும், மஹரிஷி களும் பீஷ்மாசாரியரும் கொண்டாடும் பெருமாளைக் குறித்து, கோதைப்பிராட்டி 'தரும மறியாக் குறும்பன்' என்று பாடுகிருள் (தூற்றுகிருள்). "அபயம் ஸர்வபூதேப்யோ ததாமி" என்ற விரதம் பூண்டவனை "அஞ்சேலென்னுனவனொருவன்" என்று நிர்த் தேசிக்கிருள். ரக்ஷிப்பது அவனது இயல்பு என்பதுமாறி ரக்ஷிக்காமையொன்றே அவனுக்கடையாளமாகிறது. "நின் செய்கை கண்டு நினைந்தனவோ நீண்மறைகள்" (கம்பன்) என வியக்கத்தக்கவனை "நீதியல்லாதன செய்தான்" என்று வர்ணிக்கி ருள் ஆண்டாள். அலம்புரிந்த நெடுந்தடக்கை அமரர் வேந்தனை ஏதுமொன்றும் கொளத்தாரா ஈசன் என்று பாடுகிருள்.

இவ்வண்ணமே ஆண்டாள் இட்டிருக்கும் வேறு பல நாமங்கள் நிந்தைகளாகவே அமைந்துள்ளன; ஆலோசிக்கப்புக்கால் ஆண்டாளைப்போல் பெருமாளைத் தூற்றிப்பேசியவர் ஆழ்வார்களுள் ஒருவருமில்லை. "வேல்வேந்தர் கூட்டத்தும் நாட்டகத்தும் தன்னிலைமையெல்லாம் அறிவிப்பன்" என்று மிரட்டிய மங்கைமன்னனும் "ஏலாப்பொய்களுரைப்பான்" என்றும்", "புறம்போல் உள்ளும்கரியான்" (a black God outside and a blackguard inside) என்றுவது பாடக்கற்றிலர். "உலகுதோற லர்தூற்ற" மற்பட்ட நம்மாழ்வாரு 'கடியன், கொடியன்', கள்வன் என்றுமட்டும் பேசுவர் "மசிமையிலீ" (வெட்கமில்லாதவனே) என்று கூப்பிட ஆண்டாள் ஒருத்திதான் துணிந்தாள். பேர்டகன் (பொய்யன், சுணைகேடன்) என்று அவள் ஒருத்தியே பாடத் துணிவுடையாள்.

பொதுவாக ஆழ்வார்களெல்லாம் எம்பெருமானுடைய உயர்வற உயர்நலமுடைமையைப் பெரிதும் பாராட்டி மகிழ்கிறார்கள். ஆண்டாளோ பெருமாளுடைய அகுணங்களில்—அதாவது குணங்களல்லாதவைகளில் பெரிதும் ஈடுபட்டு நிற்கக் காண்கிறோம். "ச்ருத்வாகுணாந்" என்று எழுதிய ருக்மிணிப்பிராட்டியின் சொற்களை "ச்ருத்வா அகுணாந்" என்று பதச்சேதம் செய்து காட்டுகிறாள் கோதைப்பிராட்டி. ஆழ்வார்களிலும் விலக்ஷணமான ஆண்டாளுடைய இப்பெருமையைக் கொண்டே அவள் பட்டபாடு அவர்கள் படவில்லை என்று ஊகித்தறியலாம். உண்மையில் எம்பெருமான் திறத்தில் அவளே "பட்ட-மஹிஷி" "ஆருயிர் பட்டது எனதுயிர்பட்டது" என்பர் நம்மாழ்வார். அந்தப் பொருளில் ஆண்டாளே பட்டமஹிஷி.

ஆழ்வார்களை அதிசயித்த ஆண்டாளுடைய நிந்தனை முறைகளைச் சொன்னோம். சிற்சில இடங்களில் ஆழ்வார்களைக் காட்டிலும் அழுத்தமாக வசையிட்டிருக்கும்படிகளைக் காண்போம்.

"கடியன் கொடியன் நெடியமால்" என்பது நம்மாழ்வாரது அருளிச்செயல் [திருவாய்: 5-3 5] நெடுமால் கடியனாகவும் கொடியனாகவும் இருப்பதில் வியப்பில்லை. "மழைக்கண்ணநீர் திருமால் கொடியானென்று வார்கின்றதே" திருவிருத்தம்—52) திருமால் கொடியனாயிருப்பதுதான் வியப்பு. ஆண்டாள் பார்த்தாள். அஜ்ஞாத நிக்ரஹையான தண்டிப்பது என்பதே தெரியாத பிராட்டியுடன் நித்ய யோகம் பெற்றும், இவர் கொடியவரா யிருப்பதென்னே! என்று பாடினால்தான் அவன் திருவுள்ளத்தில் உறுத்தும் என்ற கருத்தால் "கொடிய கடிய திருமால்" என்று பாடிப்போந்தாள். அப்படியே பெருமாளுக்குத் தாயான யசோதையாய்த் தம்மைப் பாவித்துக்கொண்டு "நாணெத்தனையுமிலாதாய்" என்று ஏசினார் பெரியாழ்வார். "மசிமையிலீ! கூறை தாராய்" என்று யுவதிகள் ஏச்சாக அவனை லஜ்ஜைகெட்டவன் என்று காட்டுகிறாள் ஆண்டாள். குழந்தைப் பருவத்தில் நாணமற்றிருப்பதிலும், யுவாவானபிறகு முறை தவறி நடப்பது எத்துணை அடாத செயல்! அது உள்ளத்தில் உறுத்தட்டுமென்றே இப்படிப் பாடுகிறாள்.

(பக்தியில்லாத நம் பாவி நெஞ்சால் ஆண்டாள் பிரயோகித்த வசைமொழிகளை நாம் சிந்தித்தலும் பாவம், அபசாரம். ஆண்டாளுக்கிருந்த அடங்காக் காதலும் ப்ரேமமும் நமக்கு எம்பெருமானிடத்து ஏற்பட்டவன்றே நாம் இச் சொற்களைக் கையாள உரிமை பெற்றவர்களாவோம்.)

—தி. ராமஸ்வாமி

# ஸ்ரீ வில்லிபுத்தூர் மணவாளமாமுனிகள் ஸன்னிதி ஜீயர் நியமனம்



வைகுண்டவாஸியான வித்வான் சின்ன நாராயண ஐயங்கார் ஸ்வாமியின் தமையனார் பேரனான ஸ்ரீ உ.வே. ராம அய்யங்கார் ஸ்வாமி, ஸ்ரீமத் பரமஹம்ஸ, வர்த்தமான வானமாமலை சின்ன ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியின் நியமனப்படி ஸ்ரீ வில்லிபுத்தூர் மணவாள மாமுனிகள் ஸந்நிதி சடகோப ராமாநுஜ ஜீயர் ஆஸ்தானத்தை 18—7—77ல் அலங்கரித்தருளினார். ஸ்ரீ ஸ்ரீ வானமாமலை மடத்திலும், மணவாளமாமுனிகள் ஸன்னிதியிலும் 15 ஆண்டுகளுக்கு மேலாகத் திருவாராதன கைங்கர்யம் செய்து போந்தவர். திவ்யப்ரபந்தாதிகாரி. 19—7—1977ம் தேதி ஸ்ரீ ஆண்டாள், வடபெருங்கோவிலுடையான், பெரியாழ்வார் ஸன்னிதியில் ஸ்ரீ சடகோபன் மரியாதை நடைபெற்றது.

புதுச்சேரி ஸ்ரீமாந் ஜகந்நாத ஐயங்கார் குமாரன் சிரஞ்சீவி

**ராமானுஜனுக்கும்**

சென்னை அட்வகேட் K. சக்ரவர்த்தி ஐயங்கார் குமாரத்தி ஸௌபாக்யவதி

**அனந்தலக்ஷ்மிக்கும்**

விவாஹம் **26—7—77**ல் சென்னை சுகன் விஹார் கல்யாண மண்டபத்தில் நடந்தது.



ஸ்வாமிகள், ஸ்ரீபிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச் சாரியார் ஸ்வாமிக்குப் பொன்னு டைபோர்த்தி,எம்பெருமனர்க்கும் ஸ்ரீமணவாளமாமுனிகளுக்கும் உடானபணியை ஆற்றி வரும்ஷேக்ரஞ்சீஸ்வாமியின் பெருமையை எடுத்துரைத்தார். திருவல்லிக்கேணி ஸ்ரீசரஸ்வதி பண்டாரத்தின் சார்பில் ஸ்ரீ எம்.ஏ அழகியசிங்கராச்சாரியார் பொற்கிழி அளித்தார்.

தலைவர் ஸ்ரீ ராமாநுஜம் அவர்கள் இத்திருவிழாவை 940 ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீ ராமாநுஜர் வாழ்ந்த இந்த இல்லத்தில் நடத்துவது மிகவும் பொருத்தம் என்றும், நம்மிடையில் ஸ்ரீராமாநுஜருக்கு ஒப்ப உபதேசித்துவரும் ஸ்ரீ பிரதிவாதிபயங்கரம் ஸ்வாமி அவர்கள் பல்லாண்டு வாழ்ந்து ஸ்ரீவைஷ்ணவத்துக்குத் தொண்டாற்ற வேண்டும் என்றும் பேரருளாளனைப் போற்றிக் கேட்டுக் கொண்டார்.

ஸ்ரீ.பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராச்சாரியார் உபந்நியஸிக்கத் தொடங்கு முன்பு காஞ்சீபுரம், ஸ்ரீ பெரும்பூதூர், திருவல்லிக்கேணி முதலிய திவ்யதேசங்களிலும் மற்றும் பல ஊர்களிலும் ஸ்ரீவைஷ்ணவத்துக்குப் பெருந்தொண்டாற்றிவருபவரும் திருவல்லிக்கேணி ஸ்ரீ உடையவர் கைங்கர்ய சபைக்காரியதரிசியுமான ஸ்ரீமான் K. V. ஸ்ரீநிவாசனுக்கு "ஸ்ரீவைஷ்ணவ கைங்கர்யதிலகம்" என்ற பட்டத்தை இராமாநுச கருணாலயத்தின் சார்பாக வழங்கி ஆசி கூறினர்.

ஸ்ரீ அண்ணங்கராச் சாரியார் ஸ்வாமி, எம்பெருமானருக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே அவதரித்த ஆண்டாள், ராமாநுஜரைப் பற்றி முன்கூட்டியே பாடியதை அழகாக எடுத்துரைத்தார். ஆண்டாள் வேங்கிடவர்க்கு மேகத்தைத் தூதுவிடும் "விண்ணீல மேலாப்பு" என்றபத்துப் பாசுரங்களிலு உடையவர் வைபவம் சொல்லப் படுவதைப் பிரமாணங்களுடன் மிகப் பொருத்தமாகவிளக்கினர்.

பேராசிரியர் எஸ் வி. வரதராஜ ஐயங்கார் ஸ்ரீ. உ. வே அக்காரக்கனி சம்பத் குமாராச்சார் ஸ்வாமி பாஞ்சராத்ர ஆகம வித்வான் வரதராஜ பட்டர் ஸ்வாமி, பிள்ளை லோகம் ஸ்தலசயனத்துறைவார் குமாரவாடி ராமாநுஜாசாரியார் முதலியோர் இராமாநுஜருடைய பெருமையை மேற்கோள்களுடன்எடுத்துக் கூறி உபந்நியஸித்தார்.

முடிவுரையாக நீதிபதி ஸ்ரீ ராமாநுஜம் அவர்கள் எம்பெருமானர் வைபவத்தை ஸ்ரீ ஆண்டாள் முன்கூட்டியே பாடியிருப்பதை ஸ்ரீ அண்ணங்கராச்சார்ஸ்வாமி நிலை நாட்டிவிட்டார் என்று பலத்த கைத்தட்டல்களுக் கிடையே கூறினர். நன்றியுரையோடு மகாநாடு இனிது முடிந்தது. ... ... ... ... *

---



இவ்விதழின் தொடக்கத்தில் திருநாடலங்கரித்தவராக ப்ரஸ்தாவிக்கப்பட்ட எம்பார் ஜீயர் ஸ்வாமியின் திருவுருவப்படம் இங்கே ஸேவிக்கத்தக்கது. ........ இந்த ஸ்வாமியின் ஆஸ்தானம் சூன்யமாகாதபடி உடனே பூர்த்திசெய்யப்பட்ட விசேஷம் கேண்மின். மூன்று ஸம்வத்ஸரங்களுக்குமுன்பு திருமலை திருப்பதியில் ஸ்ரீமத்பரமஹம்ஸ சின்ன ஜீயர் ஸ்வாமி பதவியில் எழுந்தருளியிருந்து காரண விசேஷத்தினுல் விலகித் திருவரங்கம் பெரியகோயிலில் விச்ராந்தராயெழுந்தருளி யிருந்த ஸ்ரீவில்லிபுத்தூர் ஜீயர் ஸ்வாமி நேற்று 9—9—77 சனிக்கிழமையன்று எம்பார் ஜீயர் ஸ்வாமி பட்டத்தில் அபிஷித்தராகி அற்புதமான மரியாதைகளைப்பெற்று மடாதிபதியாக விளங்கியருள்கிறார். ... *

## P. B அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய நூல்கள்
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்
P. B. ANNANGARACHARYA.
*Editor*, GRANTHAMALA, Kancheepuram-631503
என்ற விலாசத்திற்கு அனுப்புக.

If un-delivered please return to:
P. B. ANNANGARACHARYA,
Kanchipuram. Pin Code-631503.



To
Sriman/Srimathi

784. Sri P.A. Thiruvankatachary
16, M.M. Sannidhi Street
SRIPERUMBUDUR 602105

Edited and Published by P. B Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.
Printed by E Devarajan at Sri Kamakshi Press.
44-c Thirukatchinambi Street, Kancheepuram-631503